# விரைவில் வெளிவருகிறது

லட்சக்கணக்கான
மக்களை பரவசத்தில்
ஆழ்த்திய வடுவூரார்
நாவல்

திகம்பர
சாமியார்

வல்லவனுக்கு வல்லவன்
வையகத்தில் உண்டு என்ற
மகோன்னத தத்துவத்தை
போதிக்கும்...

மாடர்ன் தியேட்டர்ஸ்

# திகம்பர சாமியார்

டைரக்ஷன்-
டி.ஆர்.சுந்தரம்



மாக படிந்த தோற்றத்துடனும் அடிக்கடி முகப் பருக்களினாலும் தோலில் தடிப்புகளுடனும் வாழ்நாள் முழுதும் அவள் அவதிப்பட வேண்டுமென்றிருந்ததா? ஆம், அவள் அப்படித்தான் நினைத்தாள். அதிகப் பணச் செலவில் செய்த சர்ம சிகிச்சைகளும், க்ரீம்களும், களிம்புகளும் நிரந்தரமான பலனை அளிக்கவில்லை. பின்னர்தான் அவளது உபாதைகளின் மூல காரணத்தைத் தாக்கிய "க்ருஷனை" நாடினாள்......

அப்பழுக்கற்ற மேனி நிறத்தையுடைய ஆயிரக்கணக்கான ஸ்திரீகள் உலகெங்கும் 'க்ருஷ'னுக்கு நன்றி செலுத்துகின்றனர். ரத்தத்திலுள்ள அசுத்தங்களே, தோலின் மங்கலான நிறத்திற்குக் காரணமாக அமையும் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் க்ருஷனிலுள்ள ஆறு விதமான லோக உப்புக்கள் அதி அற்புதத்தை விளைவிக்கின்றன. மந்தமடைந்த உறுப்புக்களினால் கழிக்கப்பட முடியாத தொல்லை தரும் விஷப் பொருள்கள் வெளியே தள்ளப் படுகின்றன. ரத்தம் சுத்திகரிக்கப்பட்டு ஆரோக்கியம் ததும்புகிறது. தோலின் மேலுள்ள மறுக்கள் நீக்கப் பட்டு இயற்கையாகவே உள்ள அழகிய தோற்றம் பெறுகிறது.

க்ருஷனுக் அடைபட்ட உட்புற சுத்தம் திருப்பி யளிப்பது சரும சௌந்தர்யம் மாத்திரமல்ல. அது வாழ்க்கையின் ஆனந்தத்தையும் அளிக்கிறது. வாதம், மூத்திரக்கல், குடல்கள் இவற்றை இயங்குமாறு ஆறு விதங்களில் தூண்டும் "க்ருஷ"னே தேக நலத்தையும் இயற்கை அழகையும் திரும்பப் பெற மிகச் சிறந்ததும் சிக்கனமான வழியாகும். க்ருஷனின் விலை ரூ. 1-10-0 தான். எல்லாக் கெமிஸ்டுகளிடமும் வியாபாரிகளிடமும் கிடைக்கும்

க்ருஷன் ஈ. க்ரிபித்ஸ் ஹ்யூஸ், லிமிடெட்., மான்செஸ்டர். இங்கிலாந்து அவர்களால் தயாரிக்கப்பட்டு கார் & கம்பெனி லிட்., பம்பாய், மதராஸ், கல்கத்தா அவர்களால் விநியோகிக்கப் படுகின்றன.




## நீங்களும் அந்த க்ருஷன் உணர்ச்சியைப் பெறலாம்!

## சுதந்திர தின விழா விசேஷ விற்பனை!

ஆகஸ்டு 15 தேசிய சுதந்திர விழா கொண்டாட, புதிதாக வந்துள்ள ஸ்விஸ் கடிகாரங்களை வாடிக்கைக்காரர்களுக்கு செப்டம்பர் 15 வரை. குறைந்த விலையில் விற்பனை செய்கிறோம். 15,17 ஜுவல் கடிகாரங்கள் 5ம், மற்றவை 3 வருஷ உத்தரவாதம் உள்ளவை. கடிகாரத்துடன் உத்தரவாதப் பத்திரம், அழகிய ஸ்ட்ராப், வெல்வெட் பெட்டி இவை இலவசமாக அளிக்கப்படும். பாக்கிங், தபால் செலவு, விற்பனை வரி இன்றி வி. பி. பி. யில் பெற்றுக் கொள்ளலாம்.





### இலவசப் பரிசுகள்

இரண்டு கடிகார ஆர்டருக்கு ஒரு அமெரிக்கன் ப்ளாஸ்டிக் டார்ச் லைட்டோ, தங்க மூடி போட்ட அமெரிக்கன் பவுண்டன் பேனாவோ அளிக்கப்படும். மூன்று கடிகாரங்களுக்கு ஒரு பாக்கெட் வாட்சும், நான்கு கடிகாரங்களுக்கு ஒரு ஆபீஸ் டேபிள் க்ளாக்கும் அளிக்கப்படும்.



ரவுண்டு - சைஸ் 10½

| | | ஜுவல்ஸ் | ரூ. |
|---|---|---|---|
| 507 | க்ரோம் ஸ்டீல்பேக் | 5 | 20 |
| 508 | ரோல்டு கோல்டு ஸ்டீல்பேக் | 5 | 23 |
| 509 | முழு ரோல்டு கோல்டு | 5 | 26 |
| 510 | க்ரோம் ஸ்டீல்பேக் | 7 | 30 |
| 511 | ரோல்டு கோல்டு ஸ்டீல்பேக் | 7 | 33 |
| 512 | முழு ரோல்டு கோல்டு | 7 | 36 |
| 570 | க்ரோம் ஸ்டீல்பேக் | 15 | 38 |
| 571 | ரோல்டு கோல்டு ஸ்டீல்பேக் | 15 | 43 |
| 572 | 20 மைக்ரோன் தங்கம் | 15 | 53 |
| 573 | க்ரோம் ஸ்டீல்பேக் | 17 | 58 |
| 574 | ரோல்டு கோல்டு ஸ்டீல்பேக் | 17 | 63 |
| 575 | 20 மைக்ரோன் தங்கம் | 17 | 73 |



வாடர் ப்ரூப் ஷாக் ப்ரூப்
சென்டர் செகண்டு ரேடியம் - சைஸ் 8½

| | | | |
|---|---|---|---|
| 636 | க்ரோம் ஸ்டீல்பேக் | 15 | 85 |
| 637 | ரோல்டு கோல்டு ஸ்டீல்பேக் | 15 | 90 |
| 638 | 20 மைக்ரோன் தங்கம் | 15 | 95 |
| 639 | க்ரோம் ஸ்டீல்பேக் | 17 | 105 |
| 640 | ரோல்டு கோல்டு ஸ்டீல்பேக் | 17 | 110 |
| 641 | 20 மைக்ரோன் தங்கம் | 17 | 115 |



ஸ்குயர் - சைஸ் 10½

| | | | |
|---|---|---|---|
| 537 | க்ரோம் ஸ்டீல்பேக் | 5 | 29 |
| 538 | ரோல்டு கோல்டு ஸ்டீல்பேக் | 5 | 32 |
| 539 | முழு ரோல்டு கோல்டு | 5 | 35 |
| 540 | க்ரோம் ஸ்டீல்பேக் | 7 | 33 |
| 541 | ரோல்டு கோல்டு ஸ்டீல்பேக் | 7 | 36 |
| 542 | முழு ரோல்டு கோல்டு | 7 | 39 |
| 588 | க்ரோம் ஸ்டீல்பேக் | 15 | 45 |
| 589 | ரோல்டு கோல்டு ஸ்டீல்பேக் | 15 | 50 |
| 590 | 20 மைக்ரோன் தங்கம் | 15 | 55 |
| 643 | ஆல் ப்ரூப் முழு ஸ்டீல் சென்டர் செகண்டுடன் | 17 | 125 |



நீண்ட சதுர வடிவம் - சைஸ் 7½

| | | ஜுவல்ஸ் | ரூ. |
|---|---|---|---|
| 555 | க்ரோம் ஸ்டீல்பேக் | 5 | 33 |
| 554 | ரோல்டு கோல்டு ஸ்டீல்பேக் | 5 | 36 |
| 557 | முழு ரோல்டு கோல்டு | 5 | 39 |
| 558 | க்ரோம் ஸ்டீல்பேக் | 7 | 39 |
| 559 | ரோல்டு கோல்டு ஸ்டீல்பேக் | 7 | 42 |
| 560 | முழு ரோல்டு கோல்டு | 7 | 45 |
| 610 | க்ரோம் ஸ்டீல்பேக் | 15 | 50 |
| 611 | ரோல்டு கோல்டு ஸ்டீல்பேக் | 15 | 55 |
| 612 | முழு ரோல்டு கோல்டு | 15 | 60 |
| 613 | 20 மைக்ரோன் தங்கம் | 15 | 65 |
| 614 | க்ரோம் ஸ்டீல்பேக் | 17 | 60 |
| 615 | ரோல்டு கோல்டு ஸ்டீல்பேக் | 17 | 67 |



லேடீஸ் - சைஸ் 5½

| | | | |
|---|---|---|---|
| 660 | க்ரோம் ஸ்டீல்பேக் | 5 | 40 |
| 661 | ரோல்டு கோல்டு ஸ்டீல்பேக் | 5 | 43 |
| 662 | முழு ரோல்டு கோல்டு | 5 | 46 |
| 663 | க்ரோம் ஸ்டீல்பேக் | 7 | 45 |
| 664 | ரோல்டு கோல்டு ஸ்டீல்பேக் | 7 | 48 |
| 665 | முழு ரோல்டு கோல்டு | 7 | 51 |



ஆபீஸ் டேபிள் கடிகாரம் (நெ. 681)

| | | |
|---|---|---|
| 681 | ஆபீஸ் டேபிள் க்ளாக், சதுர வடிவம், தனி முழு க்ரோம் டயல் 3½" | 20 |
| 682 | அலாரம் டேபிள் க்ளாக், டயல் 4" | 19 |
| 683 | அலாரம் டேபிள் க்ளாக் முழு க்ரோம் கேஸ், ரேடியம் டயல், சைஸ் 4" | 21 |
| 684 | மெடாலு அலாரம் டேபிள் க்ளாக் தனி ரேடியம் டயல், சைஸ் 2½" | 35 |

SWISS WATCH CO., 23, Sadashiv Lane, Post Box No. 3552. BOMBAY - 4

# ஆகஸ்டு 24-ம் தேதி முதல்

## கேரளம் முழுவதும் அமோகமாக ஓடிக்கொண்டிருக்கிறது!



ஸ்ரீ கிருஷ்ணா ப்ரொடக்ஷனின்

# சந்திரிகா

## மலையாளம்

டைரக்ஷன்: **V. S. ராகவன்**

ஸ்டூடியோ: **வாஹினி**

விநியோகஸ்தர்கள் :

கோயமுத்தூர், சேலம், நீலகிரி, கொச்சி, மலபார் :
கொச்சின் பிக்சர்ஸ், எர்ணாகுளம்

திருவாங்கூர்: சென்ட்ரல் பிக்சர்ஸ், கோட்டயம்

ராமநாதபுரம், திருநெல்வேலி, புதுக்கோட்டை:
உன்னி ப்ரொடக்ஷன்ஸ், காரைக்குடி

வட ஆற்காடு, தென் ஆற்காடு, செங்கல்பட்டு, சித்தூர், பாண்டிச்சேரி:
கணேசநடராஜன் & கம்பெனி, சிவபுரி, சிதம்பரம்

மதுரை: ஸ்ரீ மீனாக்ஷி டாக்கி டிஸ்ட்ரிப்யூடர்ஸ், மதுரை

மைசூர் சமஸ்தானம், தென் கன்னடம், குடகு:
ஆர். வி. பிக்சர்ஸ், 107, கபேதார் சத்திரம் ரோடு, பெங்களூர்-2



## ஸ்ரீ கிருஷ்ணா ப்ரொடக்ஷன்ஸ்

110 E மவுண்ட்ரோடு, மதராஸ் . 18

# பொன்னியின் செல்வன்

## கல்கி

சந்திரா

இராஜ ராஜ சோழனின் இளம்பிராயத்தில் நிகழ்ந்த
மகத்தான சரித்திரத் தொடர் கதை
விரைவில் ஆரம்பமாகிறது

# கல்கி

## பொருளடக்கம்

மலர் 10 | இதழ் 4 | ஆகஸ்டு 27 | விக்ருதி ௵ ஆவணி 11



*"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.*



தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற

தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

மலர் 10 **கல்கி** இதழ் 4

# என்ன சேதி ?

## வந்த வழியே திரும்பினர்

எல்லாரையும் ஏமாற்றி வரும் காஷ்மீர் பிரச்னை கடைசியாக மத்தியஸ்தம் செய்து வைப்பதற்கு வந்த சர் ஓவன் டிக்ஸனையும் ஏமாற்றிவிட்டது. சட்ட நிபுணர் என்றும் அரசியல் பண்டிதர் என்றும் பாராட்டப்படும் சர் டிக்ஸன், மூன்று மாத காலமாக ஓய்ச்சல் ஒழிவின்றி டில்லியையும் கராச்சியையும் காஷ்மீரையும் சுற்றிச் சுற்றி வந்தார். இந்தியா, பாகிஸ்தான், காஷ்மீர் பிரதம மந்திரிகளுடன் அந்தரங்கமாகவும் பகிரங்கமாகவும் அளவளாவிப் பேசினார். பல பல யோசனைகளைக் கூறினார். கடைசியாக அவருக்கு முன் காஷ்மீர் பிரச்னையைத் தீர்ப்பதற்காக வந்த ஐக்கிய நாடுகள் சபைக் கமிஷன் இரண்டு வருஷத்தில் செய்து முடித்துச் சென்ற காரியத்தை சர் டிக்ஸன் மூன்றே மாதத்தில் செய்து முடித்திருக்கிறார். அதாவது காஷ்மீர் பிரச்னையைத் தீர்க்க முடியவில்லை என்று மேற்படி கமிஷன் வெறும் கையுடன் திரும்பியதைப் போலவே சர் டிக்ஸனும் தமது முயற்சியில் வெற்றி பெற முடியாமல் வெறும் கையுடன் வந்த வழியே திரும்ப நேர்ந்திருக்கிறது.

எனினும் டிக்ஸன் தமது முயற்சியில் வெற்றி பெறாததைக் குறித்து அவர் மீது குறை கூறுவதற்கில்லை. முதல் கோணல் முற்றும் கோணலாக முடிந்திருக்கிறது; அவ்வளவுதான்! உலக அமைதியிலும் அரசியல் நேர்மையிலும் நாட்டம் கொண்ட இந்தியா காஷ்மீர் பிரச்னையைக் குறித்து ஐக்கிய நாடுகள் சபையில் முறையிட்டுக் கொண்டது. அப்போது அந்தப் பிரச்னையை மேற்படி சபை பாரபட்சமின்றியும் அந்தரங்க சுத்தியுடனும் தீர்க்க முன் வந்திருந்தால் நிலைமை இவ்வளவு காலம் இழுத்துப் பறித்துக் கொண்டிராமலே ஒரு வழியாக முடிந்திருக்கலாம்.

## ஒன்று ஒன்பதாயிற்று!

ஆனால் ஐ. நா. சபை செய்த முதல் தவறு ஒரு சிக்கலை ஒன்பது சிக்கல்களாக வளரும்படி செய்திருக்கிறது. நீதி தவறாத இந்தியா, காஷ்மீர் மீது படையெடுத்த கொள்ளைக் கூட்டத்தினரான ஆஸாத் காஷ்மீர் படைகள், அவர்களுக்கு உடந்தையாக இருந்து எல்லா உதவியும் செய்த பாகிஸ்தான்-இந்த மூன்று பிரிவினரையும் சம நிலையில் வைத்து விவாதித்ததைக் காட்டிலும் அந்தச் சபை செய்த பெருந் தவறு வேறு என்ன இருக்க முடியும்?

உலகம் உய்வதற்கு அகில உலக ஸ்தாபனமான ஐக்கியநாடுகள் சபையைக் காட்டிலும் சிறந்த கருவி வேறு எதுவும் இல்லை என்ற தளரா நம்பிக்கையுடன் இருந்து வரும் இந்தியாவுக்குக் கூட அந்தச் சபையில் நீதி கிடைக்கவில்லை! இந்தியா முறையிட்டுக் கொண்டபோதே ஆஸாத் காஷ்மீர் படை சட்ட விரோதமானது என்றும், பாகிஸ்தான் உதவி பெற்று அது காஷ்மீரில் ஆக்கிரமித்துக் கொண்ட பிரதேசங்களை விட்டுவிட வேண்டும் என்றும் ஐ. நா. சபை கட்டளையிட்டிருக்குமாயின் காஷ்மீர் பிரச்னையில் அதிகச் சிக்கல்கள் ஏற்பட்டிராது. எனவே, இனி அந்தப் பிரச்னையைத் தீர்க்க ஐ. நா. சபைக்குச் சக்தி உண்டா என்ற சந்தேகம் எழலாம். காஷ்மீர் பிரச்னை தீராவிடில், இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் ஏற்பட்டுள்ள ஒப்பந்தத்துக்குக் கூடக் குந்தகம் ஏற்படக் கூடும். எனவே அத்தகைய விபரீதத்தினால் ஏற்படக் கூடிய விளைவை உணர்ந்து, இந்தியா பிரதம மந்திரியும் பாகிஸ்தான் பிரதம மந்திரியும் காஷ்மீர் பிரதமரும் நேரடியாகச் சந்தித்து சமரசம் செய்து கொண்டே தீருவது என்று உறுதி கொள்ள வேண்டும். காஷ்மீர் பிரச்னை மீண்டும் கொந்தளிக்காமல் தடுப்பதற்கு வேறு வழி இருப்பதாகத் தெரியவில்லை.

# ஒரே பல்லவி!



"யுத்தகால அடிப்படையில் உணவு உற்பத்தி பெருக வேண்டும்."






"உற்பத்தியைப் பெருக்கின லன்றி நாடு உருப்பட வழியில்லை."








"உற்பத்தி பெருக வழியைப் பாருங்கள்."
உணவு மந்திரி
ரோச் விக்டோரியா




"உற்பத்தி பெருகும் வழியை மக்கள் மனதில் பதிய வையுங்கள்."
பிரசாரகர்கள்
ரோச் விக்டோரியா




"உணவுப் பஞ்சம் தீருவது உங்கள் கையில்தான் இருக்கிறது."




"ரேஷனைக் குறைக்காமல் இருக்க ஏதாவது வழி செய்யுங்கள்."




"உணவுக் கஷ்டத்தைத் தீர்க்க உடனே உதவி புரியுங்கள்."

# கோட்டை கட்டுகிறார்!

இடம், காலம், சலனம் முதலிய இயற்கை சக்திகளின் தொடர்பையும் இரகசியத்தையும் விஞ்ஞான மேதாவி ஐன்ஸ்டீன் கண்டு பிடித்தார்.

முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னிருந்த நியூட்டன் ஆகர்ஷண சக்தியைக் கண்டு பிடித்து அழியாப் புகழ்பெற்றார்.

அற்புதமான மின்சார சக்தியை உலகத்துக்குக் கொடுத்துப் பேருதவி புரிந்தவர்தான் பாரடே என்னும் மேதாவி என்பதை அறியாதார் இருக்க முடியாது.

சர் ஸி. வி. ராமன் விஞ்ஞானத்தில் தனிப் பெரும் அற்புதத்தைக் கண்டு பிடித்து நோபல் பரிசு பெற்றார்.

கொலம்பஸ் அமெரிக்காவைக் கண்டு பிடித்தார்; அமெரிக்கா அணுகுண்டைக் கண்டு பிடித்தது.

போர்ச்சுகல் நாட்டைச் சேர்ந்த வாஸ்கோட காமா என்ற மகானுபாவர்தான் இந்தியாவுக்குச் செல்லும் கடல் மார்க்கத்தைக் கண்டு பிடித்து இந்தியா உள்பட பெரும்பாலான ஆசிய நாடுகளையும் ஐரோப்பியர்கள் அடிமைப் படுத்துவதற்கு அடி கோலினார்.

அவரது பரம்பரையில் வந்த மற்றொருவர் 1950-ம் வருஷத்தில் மிகப் புரட்சிகரமான இரகசியத்தைக் கண்டு பிடித்து உலகமே பிரமிக்கும்படி செய்திருக்கிறார். அவர்தான் போர்ச்சுகல் தேசத்தின் பிரதம மந்திரி டாக்டர் சலாஸார் என்பவர்.

இந்தியாவிலுள்ள கோவா போர்ச்சுகல் தேசத்தின் ஒரு பாகம்; அது போர்ச்சுகல் நாட்டைச் சேர்ந்த ஒரு மாகாணம் என்பதுதான் போர்ச்சுகல் பிரதம மந்திரி கண்டு பிடித்துள்ள அரிய, பெரிய, அற்புத இரகசியமாகும்!

டாக்டர் சலாஸாருக்கும் மேலே குறிப்பிட்ட மேதாவிகளுக்கும் ஒரு பெரிய வித்தியாசம் இருக்கிறது.

அவர்களுடைய அற்புத ஆராய்ச்சியின் வெற்றியை உலகம் உண்மை என்று ஒப்புக்கொண்டு பாராட்டி வருகிறது. ஆனால் போர்ச்சுகல் பிரதம மந்திரியின் கூற்று உலக மக்களைத் திக்குமுக்காடும்படி செய்திருக்கிறது.

அகில உலகமும் என்றென்றும் பாராட்டத் தக்க அற்புதங்களை அந்த மேதாவிகள் கண்டு பிடித்தனர். ஆனால் அகில உலகமும் எள்ளி நகையாடும்படியான ஒரு கூற்றைப் போர்ச்சுகல் பிரதம மந்திரி கண்டுபிடித்திருக்கிறார்!

நாலும் நாலும் பதின்மூன்று என்று சாதாரண பேர்வழி ஒருவர் கூறினால், அந்த நபரைப் பைத்தியக்காரர் என்று உலகம் தள்ளிவிடும்.

ஆனால், ஒரு தேசத்தின் பிரதம மந்திரி அவ்வாறு உலகம் அறிய, சண்டப் பிரசண்டமாக வெளுத்து வாங்கினால் அந்தப் பிரகஸ்பதியின் கூற்றைக் கேட்டு உலகம் திகைத்துத் திணறாமல் என்ன செய்யும்?

நாலும் நாலும் பதின்மூன்று என்பது எவ்வாறு மாபெரும் அபத்தக் களஞ்சியமோ, அது போலவே ஐயாயிரம் மைல்களுக்கு அப்பால் உள்ள, பூகோள அமைப்பு, பாஷை, பண்பாடு, பழக்க வழக்கங்கள், சாமுத்திரிகா லட்சணங்கள் முதலிய சகல அம்சங்களிலும் போர்ச்சுகீயர்களுடன் எள்ளளவும் தொடர்பு அற்ற மக்கள் வாழும் கோவாவைப் போர்ச்சுகல் நாட்டைச் சேர்ந்த ஒரு மாகாணம் என்பது அபத்தக் களஞ்சியம் அல்லவா?

"போர்ச்சுகல் கொடியின் கீழ் இருக்கும் ஆசியா காலனிகளைக் கைவிடும் உத்தேசம் எங்களுக்கு இல்லை" என்று டாக்டர் சலாஸார் இறுமாப்புடன் கூறி யிருப்பது அவருடைய ராஜதந்திர சூன்யத்தையே காட்டுகிறது.

ஏனெனில், ராஜதந்திரத்திலும் ராணுவ பலத்திலும் போர்ச்சுகல் நாட்டைக் காட்டிலும் நூறுமடங்கு மேலான பிரிட்டிஷார் இந்தியாவிலிருந்து வெளியேறி விட்டார்கள்; அமெரிக்கர்கள் பிலிப்பைன் தீவுகளிலிருந்து வெளியேறி விட்டார்கள்; டச்சுக்காரர்கள்கூட இந்தோனேஷ்யாவிலிருந்து வெளியேறி விட்டார்கள்.

அப்படியிருக்க, இந்தியாவில் உள்ள இந்தியப் பிரதேசம் போர்ச்சுகல் நாட்டின் மாகாணம் என்று டாக்டர் சலாஸார் கட்டிவரும் ஆகாசக் கோட்டையை என்னவென்று வர்ணிப்பது?

• • •

இந்தியாவில் அன்னியர்களுக்குச் சொந்தமான பிரதேசங்களை அவர்கள் கை நழுவவிட்டாலும் விடாவிடினும், அந்தப் பிரதேசங்கள் அவர்களுடைய பிடியிலிருந்து நழுவியே தீருவது என்ற உறுதி கொண்டிருக்கின்றன!

முப்பத்தைந்து கோடி மகாஜனங்கள் சுதந்திரர்களாக வாழும் இந்தியாவில்

அரை அல்லது ஒரு சத விகிதம் பேர் மாத்திரம் அந்நியர் கொடியின் கீழ் அடிமைகளாக வாழ விரும்புவார்களா?

அவர்கள் அடிமைகளாக வாழும் வரையில் பாரத நாட்டின் சுதந்திரம் பரிபூரண சுதந்திரம் ஆகாது; தொண்ணூற்று ஒன்பது சதவிகிதம் சுதந்திரம்தான் ஆகும். ஆனால், நூறு சதவிகிதத்துக்கு இம்மியளவும் குறைந்த சுதந்திரத்தைப் பெற்றால் ஒழிய பாரத நாடு திருப்தியடையாது.

இந்தியாவில் அன்னியருக்குச் சொந்தமாக உள்ள பிரதேசங்கள் இந்தியாவுடன் சேர்ந்துதான் தீர வேண்டும் என்பதை ஜெயபுரி காங்கிரஸ் ஐயம் திரிபுக்கு இடமின்றித் தெளிவாக்கி யிருக்கிறது.

மேற்படி பிரதேசங்களை "இந்தியாவின் அழகிய முகத்தில் உள்ள ஆபாசமான பருக்கள்" என்று பண்டித ஜவாஹர்லால் நேரு வர்ணித்திருக்கிறார்.

கோவா மக்களின் சுதந்திர உணர்ச்சி போர்ச்சுகல் அதிகாரிகளுக்குப் பேராத்திரத்தை உண்டு பண்ணி யிருக்கிறது. எனவே, அவர்கள் கோவாத் தலைவர்களின்மீது கொடிய அடக்குமுறைகளைப் பிரயோகித்து வருகிறார்கள்.

எனினும் அந்த அதிகாரிகளின் அடக்கு முறைகளைக் கண்டு கோவா மக்கள் கொஞ்சமும் அஞ்சவில்லை.

போர்ச்சுகல் நாட்டினரின் ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெறுவதற்காக கோவா மக்கள் அடங்கிய ஐக்கிய முன்னணி உருவாகி யிருக்கிறது. "போர்ச்சுகீயர்களின் கீழ் எங்களுக்குச் 'சுயாட்சி' வேண்டாம். நாங்கள் கோருவது கலப்பற்ற பூரண சுதந்திரம் ஒன்றுதான். கோவா, கோவா மக்களுக்கு உரியது என்பதை நிலை நாட்டியே தீருவோம்" என்று சென்ற வாரம் பம்பாயில் நடந்த கோவா மக்களின் மாபெரும் கூட்டத்தில் எட்டுத் திசைகளும் அதிர அவர்களின் பிரதிநிதிகள் முழங்கி யிருக்கிறார்கள்.

அதே சமயத்தில் புதுச்சேரியிலும் பிரஞ்சு இந்திய யுவர்கள் மகாநாடு நடந்திருக்கிறது. புதுச்சேரி, காரைக்கால், மாஹி, ஏனாம் இந்த நாலு பிரதேசங்களையும் சேர்ந்த யுவர்கள் அந்த மகாநாட்டில் கலந்து கொண்டு தங்களுடைய அபிலாஷைகளைச் சிறிதும் சந்தேகத்துக்கு இடமின்றித் தெரிவித்திருக்கிறார்கள்.

1. தற்போதுள்ள நிலைமையில் பிரஞ்சு இந்தியாவில் சர்வ ஜன வாக்கு எடுப்பது பாரபட்சமற்றதாக இருக்க முடியாது. அதில் ஜனங்கள் சுதந்திரமாகக் கலந்து கொள்ளவும் முடியாது.

2. பிரஞ்சு அதிகாரிகள் தென்னிந்தியாவில் உள்ள பிரஞ்சு இந்தியப் பிரதேசங்களிலிருந்து உடனே யாதொரு நிபந்தனையுமின்றி வெளியேறிவிட வேண்டும். அவ்விதம் செய்வதால் பிரான்சுக்கும் இந்தியாவுக்கும் நல்லுறவு பலப்படும். அத்தகைய நல்லுறவு உலக அமைதிக்கு அவசியமானது.

3. பிரஞ்சு இந்தியர்கள் தங்களுடைய தாய் நாட்டுடன் ஐக்கியம் அடைய வேண்டும் என்ற அபிலாஷைக்கு முட்டுக் கட்டை போடும் பிரஞ்சு அதிகாரிகளின் போக்கை இந்த மகாநாடு அழுத்தமாகக் கண்டிப்பதுடன், தாமதமின்றித் தாய் நாட்டுடன் ஐக்கியம் அடைந்தே தீருவது என்று பிரதிக்ஞை செய்கின்றது.

பிரஞ்சு இந்தியப் பிரதேசங்கள் இந்தியாவுடன் சேருவதுதான் நியாயம் என்ற அபிப்பிராயம் பிரான்சிலும் பலம் அடைந்து வருகிறது என்ற உண்மையை மேற்படி மகாநாட்டில் ஸ்ரீ சரவணே எடுத்துக் கூறினார்.

ஸ்ரீ சரவணே பிரஞ்சு பார்லிமெண்டில் பிரஞ்சு இந்தியப் பிரதிநிதியாக இருப்பவர். அவர் சில தினங்களுக்கு முன் பிரான்சுக்குச் சென்றிருந்த போது டிஜான் சர்வகலாசாலை மாணவர்கள் அடங்கிய பெருங் கூட்டத்தில் பேசியதாகவும், அப்போது பிரஞ்சு மாணவர்கள் பிரஞ்சு இந்தியப் பிரதேசங்கள் இந்தியாவுடன் ஐக்கியம் அடைய வேண்டும் என்பதை ஏகமனதாக ஆதரித்ததாயும் ஸ்ரீ சரவணே கூறி யிருப்பது குறிப்பிடத்தக்கது.

இவ்வாறாக, இந்தியாவிலும் பிரஞ்சு இந்தியாவிலும் பிரான்சிலும்கூட இந்தியாவில் அன்னியருக்குச் சொந்தமாக உள்ள பிரதேசங்கள் இந்தியாவுடன் ஐக்கியம் அடைய வேண்டும் என்ற அபிப்பிராயம் பலம் பெற்று வருவதைப் பிரஞ்சு சர்க்காரும் போர்ச்சுகல் சர்க்காரும் உணர வேண்டும்.

இந்தியாவில் அவர்கள் அனுஷ்டித்து வரும் கொள்கை எவ்விதத்திலும் ஒப்புக் கொள்ள முடியாதது. அக் கொள்கை உலக அமைதிக்கு ஒவ்வாதது; ஜனநாயக தர்மத்துக்கு விரோதமானது; அரசியல் நீதிக்கு முரணானது; ஐக்கிய நாடுகள் சபையின் அரசியல் சாஸனத்துக்கு முற்றிலும் மாறானது.



# நகர சோதனை

## "முகமூடி"

[குடிபடைகளின் குறைகளைத் தெரிந்து கொள்ளுவதற்காக முற்காலத்தில் மன்னர்கள் மாறு வேடம் பூண்டு 'நகர சோதனை' செய்வது வழக்கமாம். எல்லோருமே இந் நாட்டு மன்னர்களாகிவிட்ட இந்தக் காலத்தில், நமது 'முகமூடி நிருபர்' தன்னையும் ஒரு மன்னராகப் பாவித்துக்கொண்டு 'நகர சோதனை'க்குக் கிளம்பினார். வீட்டுக்கு வீடு நின்று அவர் ஒட்டுக் கேட்ட விஷயத்தை நீங்களும் கேளுங்கள்.]

"என்ன ஸார், இந்த வருஷம் நம் சுதந்திரக் குழந்தைக்கு நீங்கள் பிறந்த நாள் விழா கொண்டாடவில்லையா?"

"கொண்டாடினேன், கொண்டாடினேன். ஏழு அவுன்ஸ் அரிசிக்குப் பதிலாக ஆறு அவுன்ஸ் அரிசி வாங்கிப் பிரமாதமாகக் கொண்டாடினேன்!"

"என்ன அப்படிச் சொல்லுகிறீர்கள்? எப்படியோ கஷ்டப்பட்டு நம் சுதந்திரக் குழந்தையை மூன்று வருஷம் வளர்த்து விட்டோம். அதற்காக நாம் பெருமைப்பட வேண்டாமா? இன்னும் கொஞ்சம் கஷ்டப்பட்டு......"

"......நாம் சுதந்திரக் குழந்தையை வளர்க்க வேண்டுமானால் சொந்தக் குழந்தைகளை இரண்டு ரூபாய்க்கும் ஐந்து ரூபாய்க்கும் விற்க வேண்டியதுதான்!"

***

"பத்திரிகையிலே என்ன விசேஷம்? நம் உணவு மந்திரி முன்ஷி இன்று நம்மை ஏதாவது, புதிதாகச் சாப்பிடச் சொல்லியிருக்கிறாரா?"

"அதெல்லாம் ஒன்றும் இல்லை; பருத்திக் கொட்டைக்குப் பிறகு அவர் நம்மை ஒன்றும் புதிதாகச் சாப்பிடச் சொல்லவில்லை. அவர் என்ன செய்வார், பாவம்! அதற்குள்தான் ஜனங்களே அவரை முந்திக்கொண்டு விட்டார்களே!—பச்சைப் புல், கடப்பப் பிண்ணாக்கு, புளியங்கொட்டை — இப்படிச் சத்துள்ள ஆகாரமாகப் பார்த்து அவர்கள் சாப்பிட ஆரம்பித்து விட்டார்களே!"

"என்ன இருந்தாலும் இந்த ஜனங்களுக்கு இவ்வளவு அவசரம் கூடாது, ஸார்! கடைசியில் கனம் முன்ஷிக்கு இவர்கள் ஒரு வேலையும் இல்லாமலே செய்து விட்டார்கள்!"

"வேலை யில்லாமல் என்ன?—பீஹாரில் தொண்ணூறு பேர் பட்டினியால் செத்து விட்டார்களாம். அவர்கள் ஒவ்வொருவரும் பட்டினியால் சாகவில்லை, இன்னின்ன வியாதியால் செத்தார்கள் என்று உணவு மந்திரி என்ற முறையில் அவர் காரணம் கண்டு பிடிக்க வேண்டாமா? அந்த வேலையில்தான் அவர் இப்பொழுது மூழ்கி யிருக்கிறாராம்."

***

"இல்லை, நான் கேட்கிறேன் — நம் சென்னை மாகாணம் எப்பொழுதும் பற்றாக் குறை மாகாணமாகத்தான் இருக்க வேண்டுமா?"

"எதில் பற்றாக் குறை என்கிறீர்கள்?"




12 அவுன்ஸ் ரேஷன்



10 அவுன்ஸ் ரேஷன்



8 அவுன்ஸ் ரேஷன்

“ஏன், அரிசியில்தான்!”

“என்ன ஐயா, நீர்கூட ‘மந்திரி'யாயிருக்கிறீரே! பற்றாக்குறை அரிசியில் இல்லை ஐயா, அரிசியில் இல்லை; பணத்தில் என்று வேண்டுமானால் சொல்லும்! படி ரூ. 1-12-0 விதம் எத்தனை படி அரிசி வேண்டுமானாலும் கிடைக்கும்போது அது எப்படிப் பற்றாக்குறை மாகாணமாகும்?”

“உஸ்...பேசாமலிரும். நீர் சொல்வது கனம் ரோச் விக்டோரியாவின் காதில் விழப் போகிறது! அப்புறம் அவர் பம்பாய் மந்திரி ஸ்ரீ தின்கர் ராவ் தேசாயைப் போல, ‘எங்கே, எனக்கு அந்த விலையில் ஆயிரம் டன் அரிசி வாங்கிக் கொடும், பார்ப்போம்?' என்று சவால் விடப் போகிறார்!”

“விட்டுமே, வாங்கித் தருகிறேன்.”

“நீர் வாங்கித் தரலாம். அதை ஏற்றிக் கொண்டு செல்வதற்கு ‘வாகன்'கள் வேண்டுமே, அதற்கு என்ன செய்வது?”

“குட்டிச் சுவரில் முட்டிக்கொள்ள வேண்டியதுதான்!”

***

“இந்த அரிசி விவகாரத்தைச் சிலர் தனிப்பட்ட வியாபாரிகளிடம் ஒப்படைத்து விடலாம் என்று சொல்லுகிறார்களே, அதைப் பற்றி உங்கள் அபிப்பிராயம் என்னவோ?”

“எனக்குத் தெரிந்தவரை கள்ள மார்க்கெட்டில் அரிசி விற்பதைத் தடுப்பதற்குள்ள ஒரே வழி அதுதான்! இன்னொரு சௌகரியமும் அதில் இருக்கிறது. ஜனங்கள் ‘அரிசி கிடைக்கவில்லை' என்று சாவதற்குப் பதிலாக ‘அரிசி வாங்கப் பணமில்லை' என்று சாகலாம்.”

***

“‘உணவைப் பெருக்குங்கள்; உணவு தருகிறோம்' என்று சர்க்கார் சொல்லுகிறார்கள்; ‘உணவு கொடுங்கள்; உணவைப் பெருக்குகிறோம்' என்று கிராம வாசிகள் சொல்லுகிறார்கள். கடைசியில் இது எதில் போய் முடியும்?”

“சந்தேகமென்ன? — வெறும் பேச்சில்தான்!”

***

“ஏன் சுவாமி, கடையில் இந்த ரேஷன் என்ன ஆகும்? பன்னிரண்டு பத்தாச்சு; பத்து எட்டாச்சு; எட்டு ஏழாச்சு; ஏழு ஆறாச்சு......”

“அப்புறம் ஆறு ஐந்தாகும்; ஐந்து நாலாகும்; நாலு மூன்றாகும்; மூன்று இரண்டாகும்; இரண்டு ஒன்றாகும்; ஒன்று......”

“பூஜ்யமாகி விடுமோ?”

“ஆகலாம்; ஆனால் அதைப் பார்ப்பதற்கு நாம் கொடுத்து வைத்திருக்க மாட்டோம்!”

***

“ரஷ்யாவில் அணுகுண்டைப் போட்டு சோவியத் ஆட்சி முறையை அடியோடு ஒழித்து விடலாம் என்று சர்ச்சில் கூறுகிறாரே, அதைப் பற்றி நீர் என்ன சொல்லுகிறீர்?”

“ரஷ்யாவை மட்டுமென்ன, அணுகுண்டைப் போட்டு இந்த உலகத்தையே அழித்து விடலாம் என்று சொல்லுகிறேன்......”

“உலகத்தின் மேல் உமக்கு ஏன் அவ்வளவு கோபம்?”

“உலகத்தின் மேல் கோபம் ஒன்றுமில்லை. நம்முடைய பாரதியார் ‘தனி ஒருவனுக்கு உணவில்லையெனில் ஜகத்தினை அழித்திடுவோம்' என்று பாடியிருக்கிறாரே. அவருடைய கவி வாக்கை உண்மையாக்குவதற்காகத்தான்!”


அவுன்ஸ் ரேஷன்


6 அவுன்ஸ் ரேஷன்






பாபு

# மனித தெய்வம்



வே.லட்சுமணன்

சிறைக் கூடத்தின் உப்பரிகையிலிருந்த சாளரம்தான் அவனுக்கு இன்ப உணர்ச்சியை ஊட்டும் ஸ்வர்க்க வாசலாக இருந்தது. கனமான அதன் கம்பிகளைப் பிடித்துப் பிடித்து அவன் கை விரல்கள் இரத்தச் சிவப்பேறியிருந்தன. ஆனால் அவனுக்கு அங்கே நிற்பதில்தான் ஓர் ஆனந்தம் இருந்தது. தன்னுடைய மனத்துக்கினிய ஆனந்த வடிவமொன்றை அவன் தூரத்தில் ஓரிடத்தில் ஒரு பேழையிலே அடக்கி, அதைச் சுற்றிப் பிரும்மாண்டமான 'கோரி' ஒன்றை ஸ்தாபித்திருந்தான். ஆனால் அதன் மகத்தான ஒளியை அநுபவிக்க அந்தச் சாளரத்தின் கம்பிகளே மிகச் சிறிய இடைவெளி தந்து கொண்டிருந்தன அவனுக்கு.

'இன்பத்தின் பின்னே துன்பம்' என்பது போல, அவனுடைய வாழ்வின் இன்பப் பகுதிகள் முடிவாகித் துன்பக் கறையான்களின் ஆட்சிக் காலம் அப்போது நடைபெற்றுக் கொண்டிருந்தது. மரணத்தின் வாழ்வுக்கு அந்தக் கோரி உதாரணமாக இருந்ததுபோல், வாழ்வின் சாவுக்கு அவன் பிரத்யக்ஷ ரூபமாக அங்கே நின்று கொண்டிருந்தான்.

வற்றியுலர்ந்த அவன் நாக்கு தெளிவான பேச்சுக்களைப் பேசிப் பல வருஷங்கள் ஆகிவிட்டன. குழி விழுந்த கண்கள் அந்தக் காதற் கோயில் ஒன்றையே பார்க்க விரும்பியிருந்தன. அவன் காதுகளில் ஜஹாங்காரா பேகம் என்பவளின் இனிய மொழிகளைத் தவிர்த்து வேறு எதையும் கேட்க இடம் ஏற்படவில்லை.

ஜஹாங்காரா அவனுடைய அருமந்த குமாரி. 'அரண்மனையின் மகுடம்' என்று பாராட்டப் பட்ட மும்தாஜ் மஹால் தன் கணவனுக் கென்று அளித்த ரத்னம் அவள். தந்தையின் மீது மிகவும் பாசம் கொண்டிருந்தவளாகிய அவள், தன் தாய் இறந்த பின்பு தந்தையை மிகவும் அன்போடு ரட்சித்தாள். அந்தச் சிறையினுள் அவள் ஒருத்தியே அவனுக்கு உற்ற உறவும், தக்க துணையுமாக இருந்தாள்.

"உலகத்தின் ஸிம்மாஸனத்தில் வீற்றிருந்த சக்கரவர்த்தி ஷாஜஹான் சாளரத்தின் மேடையில் கைதியாக உட்கார நேர்ந்ததே! அதுவும் தன் மகன் ஔரங்கசீப்பின் வாயாலேயே அத் தண்டனை விதிக்கப்பட்டதே! என்ன கொடுமை இது!" என்று நாட்டு மக்களுள் பலர் புலம்பினார்கள். ஆனால் வாய்விட்டுச் சொல்லவோ, புரட்சியை உண்டு பண்ணவோ எவருக்கும் துணிவு பிறக்கவில்லை.

"ஔரங்கசீப் என்ற முரட்டுச் சிங்கம் சீறிப் பாயுமே" என்ற கிலிதான் அவர்களுடைய மௌனத்திற்குக் காரணம் என்று சொல்லத் தேவையில்லை. உண்மையில் ஷாஜஹானைத் தங்கள் 'பிதா' வென்றே கருதினார்கள் அவர்கள். ஆயினும் பிதாவுக்கு மக்கள் இருதய பூர்வமான அன்புக் காணிக்கையைத் தவிர்த்து வேறு உதவியொன்றும் செய்ய முடியவில்லை.

ஷாஜஹான் மும்தாஜ்மஹால் இறந்த பின்பு பித்துப் பிடித்தவன் போல் ஆனான். அந்தக் காதற் சின்னமாகிய 'தாஜ்மஹால்'தான் அவனுக்கு ஜீவாதார வித்தாக இருந்தது. அதைப் பார்த்துக் கொண்டிருப்பதே அவனுடைய லட்சியமாகவும் மாறிவிட்டது.

அன்று அவன் வாழ்க்கையிலேயே புதிய நிகழ்ச்சி ஒன்று நடந்தது. அதுவே அவனுடைய வாழ்க்கையில் கடைசி முக்கிய சம்பவம் என்றும் சொல்லலாம்.

• • •

சாளரத்தின் வழியே தாஜ்மஹாலைப் பார்த்துக் கொண்டிருந்த ஷாஜஹானின்

பார்வையில் ஒரு பக்கிரி தென்பட்டான் அப்போது. அவன் அந்தச் சிறைக் கூடத்தையே நெருங்கிக் கொண்டிருந்தான். அவனுடைய பரவசமளிக்கும் கீதத்தில் மன்னனின் மனம் லயித்தது. வாழ்க்கை முழுவதையும் துறந்து விட்டவன்போல் காணப்பட்ட அந்தப் பக்கிரி தன்னுடைய பழைய நினைவு ஒன்றை மட்டும் மறக்க முடியாமல் திண்டாடுகிறான் என்பதை அவனுடைய பாட்டே அறிவித்தது.

அவன் அப்பொழுது ஒரு பாரசீகப் பாட்டைப் பாடிக் கொண்டிருந்தான் :

" அழகிய சந்திரனே! நீ எப்படி இவ்வளவு அழகாயிருக்கிறாய்?

எனக்குத் தெரியும். எனக்குத் தெரியும்!
நீ அவருடைய சௌந்தரியத்திலிருந்து கடன் வாங்கி யிருக்கிறாய்!

அழகிய தாமரையே! உனக்கேது இவ்வளவு பிரகாசம்!

எனக்குத் தெரியும். எனக்குத் தெரியும்!
நீ அவருடைய வெண்மையைத் திருடியிருக்கிறாய்!

அழகிய குயிலே! என்ன இனிய கானம் உன்னுடையது!

எனக்குத் தெரியும். எனக்குத் தெரியும்!
நீ அவருடைய குரலை இரவல் வாங்கியிருக்கிறாய்!

அழகிய தென்றலே! உனக்கேது இவ்வளவு வாசனை!

எனக்குத் தெரியும். எனக்குத் தெரியும்!
நீ அவருடைய கன்னங்களில் முத்தமிட்டிருக்கிறாய்!

இந்த உலகம் ஒளிமயமாகவும் அழகாகவும் இருக்கிறது. ஏனெனில் மனத்திற்கினியந்த மன்னர் எனக்குக் கிடைத்திருக்கிறார். எல்லாத் துன்பங்களும் காலத்தின் பயங்கரப் போராட்டமும் அவருடைய அழகிய நேத்திரங்களைக் கண்டதும் என்னை ஏதும் செய்யாமல் மறைந்து விடுகின்றன!"

ஷாஜஹான் இப்பாட்டைக் கேட்ட மாத்திரத்தில் இன்பமும் துன்பமும் கலந்த மயக்கத்தில் ஆழ்ந்துவிடவே, ஜஹனாரா அவனருகில் வந்து தெளிவூட்டினாள். திரும்ப நினைவு வந்ததும், "எங்கே அந்தப் பக்கிரி? நான் உடனே அவரைப் பார்க்க வேண்டும்" என்றான்.

ஜஹனாரா அந்தப் பக்கிரியைச் சிறைக்கு வெளியே வரவழைத்து நிற்கச் செய்தாள்.

பக்கிரி மன்னனைக் கண்டதும் ஏனோ ஓரிரண்டு நீர்த்துளிகளைக் கண்ணிலிருந்தும் தெறித்தான். அப்பொழுது அவன் வாய் மற்றொரு பாட்டைப் பாடியது.

*" நவ்ரோஜ் மேளா நடந்த(து) அப்போது!
பாவை 'அர்ஜுமந்த் பானு' அங்கே
கற்கண் டொன்றை யெடுத்துக் காட்டி
மாமணி வயிரம் என்றே யுரைத்தாள்.
ராஜ குமரன் ஷாஜஹான் பார்த்தான் :
லட்சம் கொடுத்துப் பெற்றான் அதனை!
அவளும் அவன் வசம் ஆனாள் பின்னே,
அவளே 'மும்தாஜ் மஹால்' ஆனாளே!"

ஷாஜஹானுக்கு இதைக் கேட்டதும் பின்னும் அதிகமாய் உற்சாகம் ஏற்பட்டது. மிகவும் பரவசம் அடைந்து, "ஐயா! நீங்கள் யார்? என் வாழ்வைப் பற்றிய உண்மைகளையெல்லாம் இனிய கீதமாகப் பொழிகிறீர்களே!" என்று மிகவும் அன்புடன் கேட்டான்.

"நானா? நான் ஒரு பக்கிரி" என்றான் அவன் பெருமிதத்துடன்.

"தயவு செய்து தங்கள் பெயரைச் சொல்ல மாட்டீர்களா?" என்று பின்னும் வற்புறுத்திக் கேட்டான் மன்னன்.

"பக்கிரிக்குப் பேர் ஏது, ஊர் ஏது?" என்றான் சிரித்துக் கொண்டே அவன்.

அதற்குப் பின்னும் அவனைக் கேட்டுத் தொந்தரவுக்கு ஆளாக்க விரும்பாத மன்னன், "அது சரி, என் காதலி 'ஷாரா' பாடிய பாட்டு அல்லவா நீங்கள் முதலில் பாடியது! ஒரு நாள் என்னை நினைத்து அவள்தான் இவ்வாறு பாடிக் கொண்டிருந்தாள். அதை நான் மறக்கவேயில்லை. உங்களுக்கு அது எப்படித் தெரிந்தது?" என்று கேட்டான் ஆச்சரியத்துடன்.



"பக்கிரிக்குத் தெரியாததும் ஒன்று உண்டா?" என்றான் அவன்.

இவ்வாறு ஒவ்வொன்றுக்கும் ஆணித்தரமாக அவன் பதில் சொல்வதும், இனிமையாகப் பாடுவதும் ஷாஜஹானுக்கு அதிக ஆனந்தத்தைத் தந்தன.

"என் கதை உங்களுக்குத் தெரியுமா, பக்கீர்!" என்று மெல்லக் கேட்டான் மன்னன்.

"உங்கள் காதல் கதையை அசேதனப் பொருள் கூட அறியுமே! அமரத்வம் பெற்ற தல்லவா உங்கள் பிரேமை!" என்று

* 'நவ்ரோஜ் மேளா' என்பது புது வருஷப் பிறப்பு விழா.

கூறிய பக்கிரி மேலும் சில வரிகளைப் பாட்டாகப் பாடலானான்:

“ பிரேமையின் படிவம் பேகம் சாஹிபா
ஆசை நாயகன் ஷாஜஹானிடம்
ஜீவப் பிரேமை தானது ஜொலிக்க
ஜோதி வடிவாய்ச் சுடரொளி வீசினள் !
வீரத் வீரர்கள் பலரையும் பெற்றாள் ;
தீராத பாடுகள் ஏராளம் பட்டாள்;
கூர்வாள் விழியாள், குணமையே பொழிவாள்,
கொண்ட கணவனை கோயிலாக்கொள்வாள்”

என்று அவன் பாடிக் கொண்டு போகவே ஷாஜஹான் தன் மனைவி மும்தாஜ் மஹாலைத் தன் கண் முன் காண்பது போலவே உணர்ந்தான். “பெரியவரே! துன்ப வெள்ளத்திலே நான் மூழ்கும் காலத்திலே இன்பத் துளிகளைப் பொழியும் நீங்கள் யார்? நான் சிம்மாசனத்திலிருக்கும்போது நீங்கள் வரவில்லையே! அப்பொழுது ‘ஷாரா’ உங்களைக் கண்டிருந்தால் உங்களை எப்படியெல்லாம் கொண்டாடியிருப்பாள் தெரியுமா? நானும்...” என்று மேலே சந்தோஷத்தால் பேச முடியாமல் தயங்கினான் மன்னன்.

அப்பொழுது பக்கிரி அதைத் தடுத்துக் கூறினான்: “மன்னரே! இன்று நீங்கள் இப்படி நினைக்கலாம்! அன்று நிஜமாகவே நான் வந்திருந்தால் தாங்கள் இவ்வாறு நினைத்திருப்பீர்கள் என்பது நிச்சயமில்லை” என்றான்.

“ஒரு நாளும் அப்படியிராது! என் காதுகள் என்றும் இசைக்கும் இனிமைக்கும் இடங் கொடுப்பவை!” என்றான் மன்னன் சிறிதும் பின்வாங்காமல்.

“ஆம்! அது சரிதான்! ஸ்துதி பாடகர் உங்களை விட்டு நீங்காமல் உங்களுடனேயே தங்கியிருக்கும்படி செய்துவிடுவீர்கள்! அப்புறம்......”

“அப்புறம் என்று சொல்வதன் அர்த்தம் புரியவில்லையே!”

“அரசே! அப்புறம் அந்தப் பாடகன் தன் பெண்டு பிள்ளைகளை மறந்து உங்களுடனேயே வாழ வேண்டியதுதான்! உங்கள் சுகத்திற்கும், சந்தோஷத்திற்கும் அவன் கருவியாகி விடுவான்!”

இவ்வாறு பக்கிரி சொல்லவே மன்னன் திகைத்தான். ‘அவர் எதை உட்பொருளாகக் கொண்டு சொல்கிறார்’ என்று தனக்குள் யோசிக்கலானான். பக்கிரி, “அரசே! நீங்கள் முன்பு ஒரு தவறு செய்து விட்டீர்கள்! நீங்கள் அதை அறிந்து செய்யவில்லை என்பதுதான் அதில் குறிப்பிடக்கூடியது!” என்றான்.

“என்ன, என்ன?” என்று ஆர்வத்துடன் கேட்டான் மன்னன். பக்கிரி அதை விவரமாய்க் கூறினான்.

“அரசே! சிறந்த ஸாஹித்யங்களை இனிமையாகப் பாடுபவர்களுக்கு ஏராளமாய்ப்



பொன்னையும் பொருளையும் பரிசாக வழங்குவது உங்கள் வழக்கம். முன்பு ஒரு முறை பாரசீக வித்வான் ஒருவன் உங்கள் சபைக்கு வந்திருந்தான். அவனுடைய பாடல்களைக் கேட்டுத் தாங்களும் பேகம் சாஹிபாவும் மிகவும் மகிழ்ந்தீர்கள். 'அவனுக்கு 'என்ன பரிசு அளிக்கலாம்?' என்று யோசிக்கவும் செய்தீர்கள். ஆனால் அந்த யோசனை முடிவைப்பெறவில்லை. ஆயினும், அவனுடைய இனிய கீதத்தை மாத்திரம் நாள் தோறும் கேட்டுக் கொண்டிருந்தீர்கள்! ஞாபகம் இருக்கிறதா?" என்றான்.

"ஆமாம்! பின்பு அந்தப் பாரசீக வித்வான்தான் ஒன்றும் சொல்லாமலே ஓடிவிட்டாரே! நான் அவருடைய இனிய சங்கீதத்தை எப்பொழுதும் அநுபவிக்க வேண்டுமென்று எண்ணித்தான் பரிசுகளைக் கொடுக்காமல் தாமதித்தேன்!" என்றான் உணர்ச்சியுடன்.

"அது சரி! அவனுக்கு மனைவியில்லையா? குடும்பம் இல்லையா? உங்களுடனேயே சதா இருந்து கொண்டிருப்பது சாத்யமா? அவனுக்கும் பிரேமைக்குரிய பொருள் உண்டல்லவா?" என்றான் அவன்.

"ஆம்" என்று தலையசைத்தான் மன்னன்.

"சென்றவன் கதி என்ன ஆயிற்று தெரியுமா?" என்று கேட்டான் பக்கிரி.

அரசன் மிகவும் ஆர்வத்துடன் அவன் சொல்வதைக் கேட்கலானான்.

"அரசே! ஊருக்குச் சென்றான் அவன். அவனைப் பிரிந்த தாபத்தால் அவனுடைய மனைவி மிகவும் வருந்தினாள். பல நாட்கள் ஆகியும் அவன் வராததால் அவள் கடைசியில் இறந்தே போனாள்" என்றான் அவன்.

"ஆ! என்ன பரிதாபம் இது!" என்று முகம் சுருங்கினான் மன்னன்.

"கடைசியில் அவன் தன் காதலியின் சவத்தைக் கூடப் பார்க்க இயலாதவனாகி விட்டான். அது மட்டுமா? அவளுடைய சவக் குழிகூட, பெரு வெள்ளத்தில் கரைந்தோடி விட்டது! ஒரு பிடி மண்ணைக்கூட அவன் சமாதியில் அவனால் போடுவதற்கில்லை!" என்றான் ஆணி அறைந்தாற் போல்.

இந்த வார்த்தையைக் கேட்டதும் ஷாஜஹானின் அழகிய கண்ணிலிருந்து இரத்த நீர் கசிந்தது. மும்தாஜ்மஹாலின் பிரேமையைப் பூரணமாக



அறிந்து, அவனுக்கு மகத்தானதொரு மாளிகை போன்ற கோரியையே கட்டியவனுகையால், அந்தத் துயரச் செய்தியைக் கேட்கவே அவனுல் முடியவில்லை.

"பெரியவரே! நான் அந்த விருத்தாந்தங்களை அறியாமல் போய்விட்டேன். அந்த இரண்டு ஹிருதயங்களின் துடிப்பையும் நான் அறிவேன். இதற்காக நான் எந்தத் தண்டனையையும் ஏற்றுக் கொள்ளத் தயாராக இருக்கிறேன்" என்று தீனக் குரலில் கூறினுன்.

"யாருக்கு யார் தண்டனை விதிப்பது? அரசே! அது கிடக்கட்டும். இதில் இன்னெரு ஸ்வாரஸ்யமான பகுதியும் இருக்கிறது! கேளுங்கள்" என்ருன் பக்கிரி.

பக்கிரியின் முகத்தைக் கூர்ந்து நோக்கிய மன்னன், "உடனே அதைத் தெரிவியுங்கள்" என்ருன்.

"அந்த வித்வானைக் கடைசியில் ஊருக்குப் போகும்படித் தூண்டியது யார் தெரியுமா?" என்ருன் பக்கிரி.

"அவர் தாமாகச் செல்லவில்லையா?" என்ருன் மன்னன்.

"அதைக் கேளுங்கள். தங்கள் மும்தாஜ் மஹால்தான் அவனை ஊருக்குப் போகச் சொன்னுள். அந்த வித்வானுடைய விருத்தாந்தங்களைக் கேட்டறிந்து, நிறையப் பொன்னையும் கொடுத்து, 'சீக்கிரமே உங்கள் காதலியைச் சந்தியுங்கள்! பெண்ணின் உள்ளம் மிருதுவானது. தாபம் மிகுந்தால் வாடி உதிர்ந்துவிடும். உடனே போய் அபயம் அளியுங்கள்!' என்று கூறியனுப்பினுள். அப்படியும் அவன் துர்ப்பாக்கியம் அவனைப் பரதேசியாக்கி விட்டது!" என்ருன் பக்கிரி.

அதைக் கேட்டதும்தான் ஷாஜஹானுக்குச் சிறிது மனத் தெளிவு ஏற்பட்டது. 'தான் செய்ய வேண்டியதை அறிந்து தன் மனைவி செய்துவிட்டாள்' என்பதைக் கேட்டபோது அவனுக்கு எல்லை மீறிய நன்றி யுணர்ச்சியும் அவளுக்காக உண்டாயிற்று. பிறகு அந்த வித்வான் என்ன ஆனுர் என்பதை அறியத் துடித்தவன், "பெரியவரே! தற்சமயம் அந்த வித்வான் எங்கே யிருக்கிருர்? அவர் எப்படி யிருக்கிருர் தனியே?" என்ருன்.

"எப்படியா! தூய காதலியைப் பிரிந்து தாங்கள் எப்படி யிருக்கிறீர்களோ, அப்படித்தான் அவனும் இருக்கிருன்!" என்ருன் பக்கிரி.

ஷாஜஹான் அதைக் கேட்டு மிகவும் மனம் உருகினுன்.

"பக்கீர்! தாங்கள்தான் இதற்குத் தக்க பிராயச்சித்தத்தை எடுத்துச் சொல்ல வேண்டும்! நான் படும் துன்பத்தையே அவரும் படுகிருர்! அதுவும் என் அஜாக்கிரதை காரணமாகப் படுகிருர்! குற்றமோ என்னுடையதாகி விட்டது" என்று மனம் நொந்து கொண்டான்.

"அதற்குப் பிராயச் சித்தம் ஒன்றே ஒன்றுதான்!" என்ருன் பக்கிரி.

"என்ன?" என்று ஆர்வத்துடன் கேட்டான் மன்னன்.

"அந்த ஒன்றை நீங்கள் செய்து விட்டீர்கள்!" என்று புதிரைப் போல் தொடர்ந்து கூறினுன் அவன். மன்னனுக்கு அவன் பேச்சு மிகவும் வியப்பைக் கொடுத்தது. "எனக்குப் புரியவில்லையே தாங்கள் கூறுவது!" என்ருன்.

"முதலில் நீங்கள் செய்தது குற்றமே யில்லை! அது குற்றம் என்ருலும் உள்ளத்தால் நினைத்து உருகியதே பிராயச்சித்தம்! மேலும் உருகவேண்டியது அவசியமும் இல்லை! ஏனென்ருல் உங்களால் குற்றமிழைக்கப்பட்டவனை அந்த வித்வான் உங்களையே சதா நினைத்துக் கொண்டாடியும், போற்றியும் வருகிருன்!" என்ருன்.

சக்கரவர்த்தியான ஷாஜஹான் அதற்கு முன் அத்தகைய ஓர் உத்தமனைப் பற்றிக் கேட்டேயிராதவன் போல் மிகவும் வியந்தான். "அப்படியானுல் அந்த மனித தெய்வத்தை நான் கண்ணுரப் பார்த்து மகிழ வேண்டும்! தயவு செய்து என்னிடம் அவரை அனுப்ப முடியுமா?" என்று கேட்டான்.

"அல்லாவின் கருணையினுல் அவன் உங்களைப் பார்க்காமலா போய்விடுவான்! ஆனுல் முன்பு தாங்கள் இருந்த நிலையென்ன? இப்பொழுது இருக்கும் நிலை என்ன! இதை நினைத்தே அவன் ஒரு சமயம் மனவருத்தத்தால் உங்களிடம் வராது போனுலும் போவான்!" என்ருன் பக்கிரி.

"மகிழ்ச்சியில் திளைக்கின்ற காலத்திலே பலரும் வருவார்கள், போவார்கள்! ஆனுல் துயரப்படுகின்ற காலத்திலே ஒரு சிலர் தான் அவனைப் பார்க்க வருவார்கள்! அந்த வித்வான் கட்டாயம் என்னைப் பார்க்க வருவார் என்ற நம்பிக்கை எனக்கிருக்கிறது! ஏனென்ருல் அவர் மனித தெய்வம்!" என்ருன் மன்னன்.

"எதற்கும் நான் அவனிடம் தெரிவிக்கிறேன்" என்று கூறிய பக்கிரி, "நான் போய் வருகிறேன்" என்று விடை பெற்றுக் கொள்ள நின்ருன். மன்னனுக்கு அந்தப் பக்கிரியைப் பிரிய விருப்பமில்லை. அவனுடைய மற்ரெரு கீதத்தையும் கேட்க ஆவல் பிறந்தது. "கடைசியாக ஒன்றைப் பாடிப் பின்பு செல்வீர்களா?" என்ருன். உடனே பக்கிரியின் வாய் மலர்ந்தது. சாதாரணமாக இன்ப கீதமே பாடுபவனுகிய அப்பக்கிரிக்கு அப்பொழுது மன்னனைப் பிரிய வேண்டி வந்ததாலோ, அல்லது வேறு எந்தக் காரணத்தாலோ துயர கீதமே பாடத் தோன்றியது.



மனைவி:—நேற்று ராத்திரி ஏதோ தத்துப்பித்துன்னு உளறிக் கொட்டினீர்களே, அது என்ன?

கணவன்:— ஒன்றுமில்லை; நான் எம். எல். ஏ. ஆகிச் சட்டசபையில் பேசுகிற மாதிரி கனவு கண்டேன்!

"அந்தோ மாய்ந்தாள் அழகின் செல்வி,
அரசன் மீ(து)அக் காதல் மாய்ந்திலன்,
சாந்தமே வடிவாய்ச் சகத்தில் திகழ்ந்த
காந்திபோ(டு) ஒளிர்வாள் ககனம் சென்றாள்.
மாண்டவள் தன்உடல் மாண்புறக் கட்டினன்;
மாணுறு கோரி யதுவே வாழ்வாம்!
மன்னன் சிறிதும் இன்பம் இன்றித்
தன் பொருள் இழந்து தாழ்துயர் உற்றான்.
என்னே காதல்! என்னே பிரேமை!
இதுவே உலகில் சாசுவதம் அன்றோ!"

பக்கிரி பாடிய போது அவனை அறியாமல் அவன் கண்ணிலும் நீர் உதிர்ந்தது. அதைக் கேட்ட மன்னனோ உள்ளம் உடைந்து மயங்கினான். அதே சமயத்தில் அங்கு நுழைந்த சில ஆட்களின் முரட்டுக் கரங்கள் அந்தப் பக்கிரியைப் பிடித்திழுத்துக் கையில் விலங்கு பூட்டின.

"தந்தையின் கருணை முடிந்தது! இனி, தனயனின் கடமைக்காளாக வேண்டியது தான்" என்று கூறியவனாய் அந்தப் பக்கிரி அந்த ஆட்கள் வசமாய் அவர்களைத் தொடரலானான். உலகத்தின் சக்கரவர்த்தியான ஷாஜஹானுக்கு அப்பொழுது மயக்கம் முன்னிலும் அதிகமாய் மூண்டது.

* * *

மாதம் ஒன்று சென்றது. ஷாஜஹான் பக்கிரி சென்றதிலிருந்து மிகவும் வருத்தம் கொண்டவனாய் இருந்தான். பிறகு அவன் வியாதியினாலும் அவஸ்தைப் பட்டான். 'இனி அதிக நாட்கள் இருக்க மாட்டோம்' என்று அவனுக்குத் தோன்றியது. கடைசியாக ஒரு முறை பக்கிரியைப் பார்த்து விட வேண்டுமென்று தன் விருப்பத்தை ஜஹாங்காராவிடம் சொல்லிக் கொண்டிருந்தான்!

அன்று மன்னன் ஷாஜஹான் மிகவும் கடுமையான நோய் நிலையில் கஷ்டப் பட்டுக் கொண்டிருந்தான். மும்தாஜ் மஹாலின் நினைவும், கோரியின் நினைவும் கூடக் கொஞ்சம் கொஞ்சமாகத் தேய ஆரம்பித்த சமயம்! மன்னனுக்கு அதிக காலம் இனி வாழ்வில்லை என்பதை ஜஹாங்காரா பேகமும் புரிந்து கொண்டாள்.

இந்தச் சந்தர்ப்பத்தில் ஔரங்கசீப்பினிடமிருந்து இரண்டு ஆட்கள் அங்கு வந்தார்கள். அவர்கள் தங்களுடன் கூடவே பக்கிரியையும் அழைத்துக் கொண்டு வந்தார்கள். பக்கிரியின் கையில் ஓர் ஓலை இருந்தது. அப்போது மன்னன் துயர மயக்கத்தில் இருந்தபடியால் பக்கிரி வந்ததைக் கூடக் கண் பார்வையால் அறிந்து கொள்ள முடியவில்லை. ஜஹாங்காராவைப் பார்த்து, "குமாரி! உன் தந்தையைக் கடைசியாகப் பார்க்க வந்தேன்! நாட்டு மக்களிடையே ஷாஜஹானுக்குச் செல்வாக்கை ஏற்படுத்தக் கூடிய பாடல்களையெல்லாம் பாடிய குற்றத்திற்காக என்னைத் தூக்கில் இட உன் சகோதரன் ஔரங்கசீப் மன்னன் கட்டளையிட்டிருக்கிறான்" என்றான் பக்கிரி.

"ஆ! இது என்ன அநியாயம்?" என்று ஜஹாங்காரா கூவினாள்.

ஷாஜஹானின் மயக்கம் அப்பொழுது சற்றே தெளிய, பக்கீரைப் பார்த்தான்! "வாருங்கள்! வாருங்கள்" என்று சொல்லிக் கொண்டே எழுந்திருக்க முயன்றான்.

"அரசே! நீங்கள் உடம்பை அலட்டிக் கொள்ளாதீர்கள். உங்களுடைய பெயரும் புகழும் என்றும் நிலவட்டும்!" என்று கூறியவன் தன் கையிலிருந்த ஓலையை மன்னனிடம் நீட்டினான். ஜஹாங்காரா அதை எடுத்துப் பிரித்து மன்னனுக்குக் காட்டினாள். மன்னன் அந்த மயக்க நிலையிலும்கூட அதிலிருந்த வரிகளைப் புரிந்து கொண்டு படித்தான்!

"அரசே! மனித தெய்வம் என்று தாங்கள் குறிப்பிட்ட அந்த அதிர்ஷ்ட ஹீன வித்வான் நான்தான்! ஆனால் உண்மையில் சாதாரணமான மனிதன்தான் நான்! **தாங்களே மனித தெய்வம்.**"

ஷாஜஹானிடம் அதை நீட்டிய உடனேயே பக்கிரி அங்கே அதற்கு மேல் நிற்க விருப்பமில்லாமல் சென்றுவிட்டான். அவன் வாசலின் கடைசிப் படியில் கூட இன்னும் இறங்கியிருக்க மாட்டான். அப்பொழுது சிறையினுள்ளிருந்து ஷாஜஹானுடைய கடைசி மூச்சும், அதைத் தொடர்ந்து ஜஹாங்காரா பேகத்தின் அழுகுரலும் வெளிவந்தன.

**இந்தக் கதையில் வரும் ஒரு காட்சியைத்தான் இந்த இதழ் அட்டைப் படம் சித்தரிக்கிறது.**

# ஆரோக்கிய ரகசியம்



**யோகாசன நிபுணர்**

**ஸ்ரீ வி. என். குமாரஸ்வாமி**

### 3. எறும்புகூடத் தொடாது!

**த**மிழ் நாட்டு ஆகாரத்தில் முக்கிய ஸ்தானம் வகிப்பது அரிசிதான். அதை நாம் சரிவரச் சாப்பிடத் தெரிந்து கொண்டாலே போதும். நம்மை வியாதி எனும் கோரப்பேய் பிடிக்காது.

நம் முன்னோர்கள் காய், கனி, கிழங்குகளைப் பச்சையாகவே சாப்பிட்டு வந்ததால் நீண்ட காலம் நோயற்று ஜீவித்து வந்தார்கள். நாகரிகம் வளர வளர நாளுக்கு நாள் சிறிது வேக வைத்துச் சாப்பிடும் வழக்கம் ஏற்பட்டது. இந்த நாளிலோ வேகவைப்பது மல்லாமல், வேக வைத்த சத்துள்ள ஜலத்தையும் கொட்டி விட்டு, சக்கையை மட்டும் சாப்பிடும் ஆரோக்கியமற்ற வழக்கம் ஏற்பட்டு விட்டது. இன்னும் கொஞ்ச நாளானால் ஏதாவது மாத்திரைகள் விழுங்கினாலே வயிறு நிறைந்து விடும்படி ஏற்பாடு செய்தாலும் ஆச்சரியப் படுவதற்கில்லை.

"கடந்த மகா யுத்தத்தில்கூட ஜெர்மானியர்கள் இத்தகைய மாத்திரைகளைக் கையாளவில்லையா? அதை ஏன் லசர், எல்லோருக்கும் கிடைக்கும்படி செய்யக் கூடாது? ஆகாரம் பற்றாக்குறை என்று மாரடிக்கிறார்களே!" என்று பேசும் புத்திசாலிகளும் இல்லாமல் இல்லை.

நல்ல வேளையாக அப்படி ஒன்றும் நம் நாட்டில் ஏற்படாது என்று நிச்சயமாகச் சொல்லலாம். வேறு நாடுகளில் ஒரு கால் ஏற்பட்டாலும், நம் தமிழ் நாட்டார் இட்டிலி, சட்டினி, சாம்பார், துகையல் முதலியவைகளை விட்டு விட்டு, அதைத் திரும்பிக்கூடப் பார்க்க மாட்டார்கள். விஞ்ஞான அபிவிருத்தியால் மனிதர்களின் கைகால் முதலிய அவயங்களின் வேலை குறைந்து வருகிறது. இன்னும் இப்படியே போனால், வரும் ஓராயிரம் வருஷங்களுக்குப் பின் மனிதன் எப்படித் தோற்ற மளிப்பான் என்று ஒரு ஆங்கில அறிஞர் வெகு அழகாகக் கற்பனை செய்து சொல்லியிருக்கிறார். "கை, கால் கள் குட்டையாகவும் தலை பெருத்தும் காது நீண்டும், உடரக் கட்டையாகவும் பிறப்பான்" என்று வர்ணிக்கிறார். அதைப் போல வயிறு நிறையச் சாப்பிடக்கூட வேண்டாம். சத்துக்களை மட்டும் சாப்பிட்டால் போதும் என்றால், வயிற்றின் உள் உறுப்புகள் ஒன்றுக்கும் வேலையே இருக்காது. குடல்கள் சுருங்கி, வயிறு ஒட்டித் தேவாங்குபோல் மிகவும் பயங்கரமாக மனிதன் காட்சி அளிப்பான்.

"அதனால் முன் காலத்துக் காட்டுமிராண்டிகளைப்போலச் சாப்பிட வேண்டும் என்று சொல்லுகிறீர்களா? அப்படியானால் நகர வாசமெதற்கு? வீடு பங்களாக்கள் எதற்கு? எல்லோரும் காடுகளுக்கே போய்க் காய் கனிகளைப் பச்சையாகவே சாப்பிட்டுக் கொண்டு காலம் தள்ளலாமே!" என்று கேட்கலாம்.

அப்படி யாரும் சொல்ல மாட்டார்கள். முன் காலத்தில் பச்சையாகவே சாப்பிட்டிருக்கலாம். ஆனால் பல நூறு தலைமுறைகளாகவே வேக வைத்த ஆகாரங்களைச் சாப்பிட்டே வழக்கமாய் விட்டது. நமது குடல்கள் எல்லாம் அந்தப் பரம்பரையில் வந்ததுதான். ஆகையால் நாம் வேக வைத்துச் சாப்பிடும் ஆகாரங்களையே சத்துக்களை இழக்காமல் சாப்பிடப் பழகிக்கொள்ள வேண்டும்.

**பெ**ரும்பான்மையோர் நன்றாய்த் தீட்டிய மெல்லிய அரிசியின் சாதத்தைத்தான் விரும்புகிறார்கள். எங்கேயாவது விருந்துகளில் மேற்கண்ட அரிசிச் சாதம் பரிமாறினால்தான் 'விருந்து ஒன்றும் கிளாஸ்' என்று சொல்லுகிறார்கள். வீடுகளிலும் அதேமாதிரிதான். சாதத்தில் ஏதாவது சத்திருக்கிறதா என்று தான் படித்தவர்கள் ஏட்டைப் புரட்டிப் பார்ப்பதில்லை. இன்னின்ன வஸ்துவில் இன்னின்ன விட்டமின்கள் இருக்கின்றன என்று தெரிந்தவர்கள் கூடச் செய்வதில்லை.

தவிட்டை நீக்கின பாலிஷ் அரிசியை எறும்புகூட நாடுவதில்லை. தவிட்டுடன் அரிசியை வைத்துப் பாருங்கள். எறும்புகள் வந்து மொய்க்க ஆரம்பிக்கும். தவிட்டில் அதற்கு அவ்வளவு பிரியம். தவிட்டுடன் அரிசியை ஒரு மாதத்துக்கு மேல் வைக்க முடியாது. எறும்பும் வண்டுகளும் வந்து விடும். அதிக நாள் ஸ்டாக்

பண்ணி வைக்க முடியாது. மிஷினில் அரிசியை நன்றாய்த் தீட்டி விட்டால் மூட்டை மூட்டையாக வைத்து விற்கலாம். பிளாக் மார்க்கெட்டும் செய்ய வழி யுண்டு. தவிட்டுடன் இருக்கும் அரிசியைப் பதுக்கி வைக்க முடியாது. கறுப்பு மார்க்கெட்டும் நடவாது. எல்லோருக்கும் விட்டமின் 'பி' சுலபமாய்க் கிடைக்கும்.

கோதுமையைவிட அரிசியில்தான் அதிகச் சத்திருக்கிறது என்று தெரிந்து, இப்பொழுது மேல் நாட்டவரும் அரிசியைச் சாப்பிட ஆரம்பித்திருக்கிறார்கள். அவர்கள் மிகக் குறைவாக நைஸான மிஷின் அரிசியைச் சாப்பிட்டு, இழந்த தவிட்டை, பிஸ்கட்டுகளாகவும், சாக்லெட்டுகளாகவும் செய்து சாப்பிடுகிறார்கள். நம்மவர்கள் தவிட்டைச் சாக்கடையிலும், மாட்டுத் தொட்டியிலும் கொட்டி விடுகிறார்கள்.

தவிட்டுச் சத்தை இழப்பதினால் பெரி-பெரி, நமைச்சல், சொறி, சிரங்கு, ரத்த சோகை, நரம்பு பலஹீனம் முதலிய வியாதிகள் உண்டாகின்றன. டாக்டர்கள் இருக்கத்தான் இருக்கிறார்கள். விட்டமின் 'பி' காம்ப்ளெக்ஸ் 'ஏ' காம்ப்ளெக்ஸ் என்று மாத்திரைகளை வாங்கி விழுங்கச் சொல்லி விடுகிறார்கள். ஏ முதல் இஸட் வரை உள்ள விட்டமின்களை இவர்களுக்காகவே தயார் செய்து அழகான புட்டிகளில் மாத்திரைகளாகவும் டானிக்குகளாகவும் மேல் நாட்டார் அனுப்புகிறார்கள். மேற்படி மருந்துகளுக்கு ஏஜெண்டுகளாக இருந்து வருகிறார்கள் நம் டாக்டர்கள்.

இன்றுள்ள பாதி நோய்களுக்கு மூல காரணம் நாம் சாப்பிடும் தவிடு நீக்கின அரிசிதான் என்பதில் சந்தேகம் இல்லை.

பணக்காரர்கள் டாக்டர்களிடம் போகவும், அவர்கள் சொல்லும் மருந்துகளை வாங்கிச் சாப்பிடவும் முடியும். ஏழைகள் உடல் நலம் குன்றி நோய்களுக்கு இரையாவதைத் தவிர வேறு மார்க்கமில்லை.

"ரேஷனில் அரிசி கொடுக்கும் இந்தக் காலத்தில் தவிட்டுடன் கூடிய அரிசிக்கு எங்கு போவது?" என்று கேட்கலாம்.

சில நாட்களுக்கு முன் உணவுப் பஞ்சக் காரணத்தினால் சர்க்கார் ஒரு தடவை மட்டும் மிஷினில் கொடுத்த அரிசியை ரேஷனில் கொடுத்தார்கள். அதை எல்லோரும் எப்படிச் சாப்பிட்டார்கள்? கஷ்டப் பட்டாவது மிஷின் இருக்கும் இடம் தேடிப் பாலிஷ் செய்து கொள்ளவில்லையா? வீட்டிலாவது உரலில் குத்திக் கொள்ளவில்லையா? சட்ட சபைகளில் சரமாரியான கேள்விகள் கேட்கப்பட்டன. "தொழிலாளிகள் வேலை முடிந்து வீட்டுக்கு வந்து அன்றாடம் ரேஷனில் வாங்கிய அரிசியைக் குத்திச் சாப்பிட முடியுமா?" என்று தொழிலாளர்கள் மேல் அநுதாபங் கொண்டு கேட்டனர். உண்மையில் தொழிலாளர்களுக்கு அந்த அரிசியினால் ஒரு கஷ்டமும் கிடையாது. அப்படியே சாப்பிட்டாலாவது கொஞ்சம் சத்து அதிகமாகக் கிடைக்கும். அதற்குக்கூட வழியில்லாமல் எப்படியோ சண்டை போட்டு இப்பொழுது இரண்டு தடவை மெஷினில் தீட்டிய அரிசியை ரேஷனில் கொடுக்கிறார்கள். பெரும்பாலோர் அதையும் குத்தியோ, மெஷினில் தீட்டியோதான் சாப்பிடுகிறார்கள்.

நமது நாட்டில் உணவுப் பற்றாக் குறை பத்தில் ஒரு பங்குதான். இதற்காக நமது தலைவர்கள் எவ்வளவு பாடுபடுகிறார்கள்? உணவுக்காக அயல் நாடுகளைக் கெஞ்ச வேண்டி யிருக்கிறது. அயல் நாட்டார் கொடுக்கும் உபயோகமில்லாத உணவு தான்யங்களை நாம் வாங்கிக் கொண்டு கோடிக் கணக்காகப் பணத்தை அயல் நாடுகளுக்குக் கொட்டிக் கொடுக்கவேண்டியதாய் இருக்கிறது. இதற்காக எத்தனை இலாகாக்கள்! எத்தனை பண விரயம்! தலைவர்களின் அருமையான நேரங்களை எல்லாம் இதில் செலவிட வேண்டியதாய் இருக்கிறது. பொது ஜனங்கள் கொஞ்சம் சிரத்தை யெடுத்துக் கொண்டால் நம் நாட்டில் விளையும் உணவுகளைக் கொண்டே நமது தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளலாம். (தொடரும்)




"என்ன, கணக்குப் பிள்ளை! கொரியாச் சண்டையிலே அமெரிக்கா ஒருவேளை அணு குண்டைப் போட்டு விடுமோ?"

"அதுதான் கவலையா யிருக்கிறது! அணுகுண்டைப் போட்டால் பாவம், கொரியா தீர்ந்து போய்விடும்!"

"கொரியா போனால் போகிறது, ஓய்! சண்டை நின்று சாமான் விலை இறங்கிப்போனால் என்ன செய்கிறது?"

# யுத்தக்ஷேத்திரம்

ஜெயமணி

★ ★ ★ சென்னையிலே 1938-ம் வருஷம் ஆட்சி புரிந்த காங்கிரஸ் சர்க்காரின் தீர்க்க தரிசனத்தினால் சென்ற மகா யுத்தத்தின்போது ஒன்றிரண்டு லட்சம் தமிழ்த் தொழிலாளர்கள் பலியாகாமல் தப்பினார்கள்.

எப்படித் தப்பினார்கள் என்ற விவரங்கள் மலாய் நாட்டைப் பற்றிய இந்தக் கட்டுரைத் தொடரில் குறிப்பிடப் பட்டிருக்கின்றன. ★ ★ ★

மலாய் நாட்டில் கரும்புத் தோட்டங்களும் காப்பித் தோட்டங்களும் மாத்திரம் இருந்த காலத்திலேயே இந்தியாவிலிருந்து பிரிட்டிஷார் ஆயிரக்கணக்கான தொழிலாளர்களை அங்கு கொண்டுபோய்ச் சேர்த்தார்கள். எனினும் அந்த நாட்டில் ரப்பர் தோட்டங்கள் ஏற்பட்ட பின்னர்தான் அங்கு முக்கியமாகத் தமிழ் நாட்டிலிருந்து லட்சக் கணக்கான தொழிலாளர்கள் போய்க் குடியேறினர்.

தமிழ் நாட்டிலிருந்து குறைந்த சம்பளத்தில் ஏராளமான தொழிலாளர்கள் கிடைத்ததால் பிரிட்டிஷ் சர்க்கார் மலாய் நாட்டில் ரயில்வேக்களிலும், மராமத்து வேலைகளிலும், துறைமுக வேலைகளிலும் அவர்களையே நியமித்து வந்தார்கள்.

மலேயாவில் ரப்பர் மரங்களிலிருந்து பால் வெட்டி எடுப்பதற்கு எப்போதும் ஏராளமான தொழிலாளர்கள் தேவையாக இருப்பது போல், அந்த நாடு முழுவதும் புல் வெட்டுவதற்கும் ஏராளமான தொழிலாளர் தேவையாக இருக்கிறார்கள்.

இந்தியாவில் உள்ள பல இடங்களில், நந்தவனங்களிலும் ரஸ்தா ஓரங்களிலும் புல்வளர்ப்பதற்குத் தண்ணீர் ஊற்றிப் பாடுபடுகிறார்கள். அப்படியும் அந்த இடங்கள் கட்டாந் தரையாகவே காட்சி அளிக்கின்றன. பசும் புல்லைக் காண்பது அரிதாக இருக்கிறது. ஆனால் மலாய் நாட்டின் நிலைமை முற்றிலும் வேறாகும். அங்கு கோடைகாலமே இல்லையாதலாலும், அநேகமாக தினந்தோறும் மழை பெய்வதாலும் மரங்களும் செடிகளும் பச்சைப் பசேலென்று கண்களுக்குக் குளிர்ச்சியாக இருக்கும். சிமெண்டு, தார் ரோடுகளைத் தவிர மற்ற எல்லா இடங்களிலும் புல் வளர்ந்துவிடும். அதைச் சில மாதங்களுக்கு ஒரு தடவை வெட்டாவிட்டால் புல் நாலு, ஆறு அடி உயரத்துக்கு மேலும் வளர்ந்து புலிகளுக்கும் மலைப் பாம்புகளுக்கும் பதுங்கும் இடமாகி விடும். நகரங்களுக்குள்ளே புல் புதரில் பதுங்கியிருந்த புலிகளுக்கு எவ்வளவோ பேர் இரையாகி இருக்கிறார்கள். எனவே, இதிலிருந்து அந்த நாட்டில் அடிக்கடி புல் வெட்ட வேண்டியதன் அவசியத்தைத் தெரிந்து கொள்ளலாம்.

மலேயாவில் 1931-ம் வருஷம் எடுக்கப்பட்ட ஜெனஸ் கணக்கின்படி மொத்தம் அங்கிருந்த 6,24,007 இந்தியர்களில் 5,14,959 பேர் தமிழர்கள்தான் என்று தெரிகிறது. இப்போது அந்த நாட்டில் உள்ள இந்தியர்களின் மொத்தத் தொகை எட்டு லட்சத்துக்குமேல் இருப்பதாகவும் அவர்களில் சற்றேறக் குறைய ஆறு லட்சம் பேர் தமிழர்கள் என்றும் மதிப்பிட்டிருக்கிறார்கள். மொத்தம் உள்ள இந்தியர்களில் எழுபது சத விகிதம் பேர் தொழிலாளர்; முப்பது சத விகிதம் பேர் வியாபாரத்திலும் உத்தியோகத்திலும் ஈடுபட்டிருக்கிறார்கள்.



சிங்கப்பூர் கோவிலில் உள்ள வெள்ளி, தங்க ரதம்.

மலாய் நாட்டில் மலாய்க்காரர்களையும் இந்தியர்களையும் காட்டிலும் சீனர்கள் அதிகத் தொகையினராயினும், அவர்களில் பெரும்பாலோர் சமீப காலத்தில் வந்தவர்களே. சென்ற மகா யுத்தத்துக்கு முன்

சீனாவில் ஜப்பானியர் படை யெடுத்து வெற்றி பெற்று வந்ததால் எத்தனையோ லட்சக் கணக்கான சீனர்கள் தென்கிழக்கு ஆசியா நாடுகளுக்கு ஓடி வந்து அடைக் கலம் புகுந்தார்கள். தற்போது பிலிப் பைன் தீவுகள், சயாம், இந்தோ சீனா, இந்தோனேஷ்யா, பர்மா, மலேயா முதலிய பல நாடுகளிலும் சீனர்களின் தொகை அதிகமாக இருப்பதற்கு அது தான் காரணமாகும்.

சென்ற மகாயுத்தத்துக்கு முன் மலாய் நாட்டில் சீனர்கள் குடியேறுவதைப் பிரிட் டிஷார் கட்டுப்படுத்தி விட்டார்கள். சீன ஜப்பான் யுத்தம் காரணமாக லட்சக் கணக்கான சீனர்கள் இடை விடாமல் மலாய் நாட்டுக்கு வந்து குடியேறியதே அதற்குக் காரணம். அவ்வாறு தடுத்திரா விட்டால் இன்று அந்த நாட்டில் சீனர் களின் எண்ணிக்கை இன்னும் பல லட்சம் அதிகமாகியிருக்கும்.

தென் கிழக்கு ஆசியா நாடுகளில் வசிக் கும் இந்தியர் சமூகத்துக்கும் சீனர் சமூகத் துக்கும் உள்ள ஒரு முக்கிய வேற்றுமை யைக் குறிப்பிட வேண்டியது அவசியம்.

அந்த நாடுகளில் குடியேறியுள்ள சீனர்கள் அங்கு பல தொழில் துறைகளி லும் துணிந்து இறங்கிச் செல்வாக்குப் பெற்றிருப்பதுடன், பெரும்பாலோரும் அந்த நாடுகளிலேயே நிரந்தரமாக ஸ்தாபித்திருக்கிறார்கள். எனவே முக்கிய தொழில் ஸ்தாபனங்கள் எல்லாம் அவர்க ளுடைய கையில்தான் இருக்கின்றன.

மலாய்நாட்டிலே சீனர் சமூகத்துக்கு உள்ள பலமும், பணப்பெருக்கமும், செல் வாக்கும் மலாயர் சமூகத்துக்கோ இந்தியர் சமூகத்துக்கோ இல்லை எனலாம்.

இந்தியர்களில் பெரும்பாலோர்,—ஏழை களும் சரி, அங்கு ஏராளமான சொத்துக் களையுடைய செல்வந்தர்களும் சரி, மலாய் நாட்டில் குடும்பங்களுடன் நிரந் தரமாக ஸ்தாபிக்க விரும்புவதில்லை.

தாய் நாட்டின் மீது இந்தியர்களுக்கு இருக்கும் எல்லையற்ற பாசமே அத்தகைய நிலைமைக்குக் காரணம். மலாய் நாட் டிலே பிறந்து தலைமுறை தலைமுறை யாக அங்கு வசித்து வரும் இந்தியர்களின் குடும்பங்கள் கூட இந்தியாவுக்குச் செல்ல வேண்டும், இந்தியாவைப் பார்க்க வேண் டும் என்று ஏங்குவது உண்டு.

ஆனால் சீனர்களின் நிலைமை முற்றிலும் வேறாகும். சீனர்களுக்கு அவர்களுடைய தாய் நாட்டிடம் பாசம் இல்லை என்று சொல்ல முடியாது. எனினும் யுத்தம் உள்நாட்டுச் சண்டை, பஞ்சம், பிணி முத லிய கொடுமைகளுக்குப் பயந்து அவர்கள் பல வெளி நாடுகளுக்கும் சென்று அடைக் கலம் புகுந்திருப்பதால், அவர்களில் பெரும் பாலோருக்குத் திரும்பவும் தாய் நாட்டுக் குச் செல்லவேண்டும் என்ற எண்ணமோ விருப்பமோ எழுவதில்லை. எனவே, தாங்கள் அடைக்கலம் புகுந்த நாட்டையே அவர்கள் தாய் நாடாகக் கொண்டு விடுகிறார்கள்.

சீனாவின் சரித்திரத்தில் பஞ்சமும் பிணி யும் அந்த நாட்டை எவ்வளவு தூரம் பாதித்திருக்கிறது என்பதை அவர்களி டையே வேரூன்றியுள்ள ஒரு வழக்கத்தி லிருந்து ஊகித்துக் கொள்ளலாம்.

இப்போது தமிழ்நாட்டில் ஏற்பட்டுள்ள உணவுப் பஞ்சம் காரணமாக திருநெல் வேலி ஜில்லாவில் சில ஏழைகள் தங்க ளுடைய குழந்தைகளை விற்றார்கள் என்று சில தினங்களுக்குமுன் கூறப்பட்டது. இதைக் கேட்டு நம் நாட்டில் உள்ள யாவரும் மனம் அடித்துத் திடுக்கிட்டிருப் பார்கள் என்பதில் சந்தேகம் இல்லை.

ஆனால் சீனர்களிடையே குழந்தைகளை விற்கும் வழக்கம் சர்வ சகஜமாக இருந்து வருகிறது. அவ்வாறு விற்கப்படும் குழந் தைகளைச் செல்வம் படைத்த சீன முத லாளிகள் வாங்கவும் தயங்குவதில்லை. ஒவ் வொரு செல்வந்தரிடமும் அவ்விதம்



விலைக்கு வாங்கப்பட்ட சீனக் குழந்தைகள் பத்து, இருபது, முப்பது என்று ஏராளமாக இருப்பது உண்டு.

*　　*　　*

மலேயாவிலுள்ள ரப்பர் தோட்டங்களின் மூலம் கோடி கோடியாக லாபம் பெறும் பிரிட்டிஷ் முதலாளிகள் அந்தத் தோட்டங்களின் உயிர்நாடியான இந்தியத் தொழிலாளர்களுக்குப் போதிய சம்பளம் கொடுப்பதில்லை என்பது வெகு காலத்திய புகார் ஆகும். இப்போது ரப்பர் விலை அபரிமிதமாக உயர்ந்திருப்பது போல் சென்ற மகாயுத்தம் ஏற்பட்ட பின், தென் கிழக்கு ஆசியாவில் மேற்படி யுத்தம் பரவுவதற்கு முன் அதன் விலை உயர்ந்து வந்தது. ரப்பர் விலை உயர்ந்தது; விலைவாசிகளும் உயர்ந்து கொண்டு போயின; தோட்ட முதலாளிகளின் லாபமும் பெருகிக் கொண்டே போயிற்று. ஆனால் ஏழைத் தொழிலாளர்களின் சம்பளம் மாத்திரம் முதலாளிகளின் பிடிவாதம் காரணமாக உயராமல் சண்டித்தனம் செய்ய ஆரம்பித்து விட்டது!

---

## கேட்டீரா?




பாகவதர் :—நான் நேற்று ரேடியோவிலே பாடினேனே, அதைக் கேட்டீரா?

பிரமுகர் :—உம்மை ரேடியோவிலே பாட வேண்டாம் என்று பல தடவைகள் சொன்னேனே, அதை நீர் கேட்டீரா?

போதாக் குறைக்கு, 1938-ம் வருஷம் மலேயா சர்க்கார் தோட்டத் தொழிலாளர்களின் சம்பளத்தைக் குறைத்ததால், அப்போது சென்னையில் அதிகாரத்திலிருந்த ராஜாஜி சர்க்கார் மலேயா சர்க்காரின் போக்கைக் கண்டித்து அந்த நாட்டுக்குத் தொழிலாளர் குடியேறுவதைத் தடுக்க ஏற்பாடு செய்து விட்டார்கள். அதனால் தோட்ட முதலாளிகள் கஷ்டப்பட நேர்ந்தது. எனினும் அவர்கள் தங்களுடைய பிடிவாதத்தைக் கைவிட வில்லை. இதன் விளைவாக 1941-ம் வருஷம் மலாய் நாட்டிலே பரந்த முறையில் தோட்டத் தொழிலாளர்களின் வேலை நிறுத்தமும் ஆரம்பமாயிற்று. அதன் காரணமாக ஏராளமான தொழிலாளர்களை மலேயா சர்க்கார் நாடு கடத்தி விட்டார்கள், அதாவது இந்தியாவுக்கு அனுப்பி விட்டார்கள்.

சென்ற மகாயுத்தத்துக்கு முன் இந்தியாவிலிருந்து மலாய் நாட்டுக்குத் தொழிலாளர்கள் குடியேறுவதைத் தடுத்ததன் பலனாக இந்தியாவின் கௌரவம் நிலை நிறுத்தப்பட்டது. தங்களுடைய பிரஜைகளுக்கு நியாயமான சம்பளமும் வசதிகளும் அளித்தாலன்றி இந்தியா பிறநாடுகளில் கஷ்டப்படுவதற்காகத் தொழிலாளர்களை அனுப்பிக் கொண்டிராது என்பதைத் தோட்ட முதலாளிகள் நிதர்சனமாகத் தெரிந்து கொண்டனர்.

அந்தத் தடை மற்றொரு விதத்திலும் மகத்தான நன்மையாக முடிந்தது. அதாவது அப்போது ரப்பரின் விலை உயர்ந்து ரப்பர் உற்பத்தி வெகு மும்முரமாக நடந்து கொண்டிருந்தது. எனவே தொழிலாளர்கள் மலேயாவுக்குச் செல்லுவதைத் தடுக்காமல் இருந்திருந்தால் மேலும் லட்சக்கணக்கான தொழிலாளர்கள் அங்கு சென்று யுத்த காலத்தில் மாட்டிக் கொண்டிருப்பார்கள். பஞ்சம் என்றால் என்ன என்பதையும் பிச்சைக்காரர்கள் எப்படியிருப்பார்கள் என்பதையும் அறியாத மலேயாவிலே யுத்த காலத்தில் ஏற்பட்ட கொடும் பஞ்சத்தினால் தெருக்களில் ஆயிரக் கணக்கான தொழிலாளர்கள் விழுந்து மடிந்ததைப் போல மேற்படி தொழிலாளர்களும் மடிந்திருப்பார்கள். பாங்காக்—ரங்கூன் ரயில் பாதை போடுவதற்காக ஜப்பானியரால் கொண்டு போகப்பட்டுப் பலியான இந்தியத் தொழிலாளர்களின் தொகை ஒரு லட்சத்துடன் நின்றாது! எனவே, அப்போது சென்னையில் ஆட்சி புரிந்த காங்கிரஸ் சர்க்காரின் தீர்க்கதரிசனம் மலேயாவிலே மேலும் ஒரு இரண்டு லட்சம் தமிழ்த் தொழிலாளர்கள் பலியாகாமல் தடுப்பதற்கு ஹேதுவாயிற்று என்று கூறுவது மிகையாகுமா

# இலங்கையில் தமிழ்த் திருவிழா

**ரஜனி**

கொழும்பு தமிழ்ச் சங்கத்தின் எட்டாவது ஆண்டு நிறைவு விழா இலங்கை இதுவரை கண்டிராத கோலாகலமான இலக்கியத் திருவிழாவாக நடைபெற்றது. இவ்விழா இரண்டு மாதங்களுக்கு முன்பே நடைபெற்றிருக்க வேண்டும். ஜூன் மாதம் இங்கு விஜயம் செய்வதாயிருந்த "கல்கி" ஆசிரியர் ஸ்ரீ ரா. கிருஷ்ணமூர்த்தி சில காரணங்களினால் வர இயலாததால் சங்கத்தினர் விழாவை ஒத்திப்போட்டு விட்டனர்.

ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி விமான நிலயத்தில் வந்திறங்கியதும் ஈழ நாட்டிலே தமிழ்ப் பற்றும் தமிழ் அபிமானமும் உடையவர்கள் ஆயிரக்கணக்கில் பல்லாயிரக் கணக்கில் திரண்டு வந்து அவரை வரவேற்றனர்.

வெள்ளவத்தை என்னுமிடத்திலுள்ள சைவ மங்கையர்க் கழக மண்டபத்தில் ஆண்டு விழா சென்ற 19, 20-ந் தேதிகளில் நடைபெற்றது. முதல் நாள் கூட்டத்துக்கு சங்கத் தலைவர் ஸ்ரீ கே. எஸ். அருள் நந்தி தலைமை வகித்து தெள்ளு தமிழில் அற்புதமாகப் பேசினார். "உலகிலே மற்ற தேசத்தவர்கள் குகைகளிலும் மரங்களின் மீதும் வசித்த காலத்தில் தமிழர் நாகரிகமாக, உயர்ந்த பண்பாடுகளுடன் வாழ்ந்து வந்தார்கள். அந்தக் காலத்தில் இயற்றிய அமர கவிதைகளே அவைகளுக்குச் சான்று" என்று அவர் கூறினார்.

"தமிழர் இலங்கையில் குடியேறினர் என்பது தவறு. தெற்கிலிருந்துதான் வடக்கு நோக்கித் தமிழர் குடியேறினர். இலங்கையில் சிங்களம் ஒன்றை மட்டும் உத்தியோக பாஷையாகச் செய்ய சிலர் முயற்சிக்கிறார்கள். தமிழுக்கு இங்கு ஆபத்து ஏற்படுமாயின் தமிழைப் பாதுகாக்க தென்னிந்தியத் தமிழர்களும் ஒத்துழைத்து உதவி புரிவார்களென்று நம்புகிறேன்" என்று சங்கக் காரியதரிசி ஸ்ரீ வ. மு. கனகசுந்தரம் கூறினார்.

"கவிஞர் பரம்பரை" என்ற பொருள் பற்றி "கல்கி" ஆசிரியர் ஸ்ரீ ரா. கிருஷ்ணமூர்த்தி பிறகு பேசினார். "சில வருடங்களுக்கு முன் மதுரைக்குப் போனேன். அங்கு ஸ்ரீ மீனாட்சியம்மன் கோயிலில் உள்ள தாமரைப் புஷ்கரணியைப் பார்த்தேன். அதில் மூழ்கினால் உடனே சுவர்க்கம் போய் விடலாமென்றார்கள். இவ்வளவு சீக்கிரமாக சுவர்க்கத்துக்குப் போய்விட விரும்பாமல் அதன் கரையிலேயே நின்று பார்த்தபொழுது அங்கு ஸ்நானம் செய்ய வந்த ஒருவர் பாசியில் வழுக்கிக் குளத்தில் விழுந்து விட்டார். அவரைக் காப்பாற்ற நாங்கள் கூப்பாடு போட்டோம். இந்தச் சம்பவம் அதே குளத்தில் 2,000 ஆண்டுகளுக்கு முன்பு நடந்த ஒரு சம்பவத்தை எனக்கு நினைவூட்டியது. 2,000 ஆண்டுகளுக்கு முன் திருவள்ளுவர் தமது எட்டுச் சுவடிகளை அரங்கேற்ற மயிலாப்பூரிலிருந்து மதுரைக்கு வந்தார். அப்பொழுது தமிழ்ப் புலவர்கள் இதே குளத்தில் ஒரு படகில் எதிர்சென்று நடுக்குளத்துக்குப் போய் தமிழ் ஆராய்ச்சிகள் நடத்துவது வழக்கமாம். அந்தப் புலவர்களிடம் போய் தம்முடைய எட்டுச் சுவடிகளையும் படித்துப் பார்க்க வேண்டுமென்று வள்ளுவர் பெரிதும் மன்றாடினார்.



ஆசிரியர் (மாணவனைப் பார்த்து):— டேய் ராமா! அக்காலத்தில் முத்துசாமி ஐயர் போன்ற பெரியவர்களெல்லாம் முனிசிபாலிட்டி லைட்டின் கீழ் இருந்து படித்து முன்னுக்கு வந்தார்கள் என்று படிக்கிறாயே, இதிலிருந்து என்ன அறிகிறாய்?

பையன் (சிறிது நேரம் யோசித்து):— அக்காலத்தில் முனிசிபாலிட்டி விளக்குகள் கொஞ்சம் பிரகாசமாக எரிந்திருக்க வேண்டுமென அறிகிறேன்!



நண்பர் :—அன்றைக்குப் பார்த்தேனே உங்களை, மோட்டார் சைக்கிள் விட்டுக்கொண்டு போனீர்களே!

சூட்டுக்காரர் :—அடாடா! நான் உங்களைக் கவனிக்கவில்லையே?

நண்பர் :—என்னை நீர் கவனிக்கா விட்டால் பரவாயில்லை! ரோட்டைச் சரியாகக் கவனித்து ஒழுங்காய் ஓட்டிக்கொண்டு போனால் போதும்!

---

ஆனால் அதற்கு அவர்கள் இணங்கவில்லை. பலகால் வரை வள்ளுவர் விடாப்பிடியாக மன்றாடியதால் 'படகில் சுவடிகளை வை. எங்களுக்கு ஒப்பிருந்தால் படித்துப் பார்க்கிறோம்' என்றார்களாம். படகில் எட்டுச் சுவடியை வைத்ததும் எட்டுச் சுவடிகளுக்கு மட்டுமே இடம் இருக்கும்படி படகு சுருங்கியது. படகிலிருந்த எல்லாப் புலவர்களும் குளத்தில் விழுந்து தங்களைக் காப்பாற்றும்படி கூப்பாடு போட்டார்கள். வள்ளுவரின் சுவடிகளைப் படித்துப் பார்க்க அவர்கள் ஒப்புக்கொண்ட பிறகே கரையிலிருந்தவர்கள் புலவர்களைத் கைதூக்கிக் காப்பாற்றினர்.

"அவருக்கு ஆயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு தோன்றிய கம்பரும் தம்முடைய கவிதை அரங்கேற்ற எவ்வளவோ கஷ்டப்பட்டார். இவ்விரு கவிஞர்களின் இலக்கியங்களைத் தமிழ்ப் புலவர்கள் இலேசில் ஒப்புக்கொள்ளவில்லை. கடைசியில் ஒப்புக்கொண்ட பின் அவர்களைப் போற்றிப் புகழ்ந்து பாராட்டினார்கள். நம் காலத்தில் பாரதியார் மிகக் கஷ்டப்பட்டதாகப் பலர் கூறியபொழுதிலும் உண்மையில் அவரை "சுதேசமித்திரனு"ம் சில தமிழ் அன்பர்களும் ஆதரித்தனர்.

"இன்று தமிழ் மொழிக்கு ஸ்ரீ தேசிக விநாயகம் பிள்ளை உயிர் நாடியாக விளங்குகிறார். இவ்வாறு கவிஞர் பரம்பரை தமிழர் இலக்கியப் பொக்கிஷத்தைப் போற்றிப் பல்லாண்டு பல்லாண்டுகளாக வளர்த்து வந்துள்ளது. உலகில் பல மொழிகள் இருப்பினும் ஆதியும் அந்தமும் இல்லாத சக்தி மிகுந்த, சுவை மலிந்த, நயம் மிகுந்த மொழி தமிழ் ஒன்றுதான். சாஸருக்கு முன்பு ஆங்கிலம் இருந்ததை நாம் அறியோம். சாஸர் காலத்து ஆங்கிலமும் இப்பொழுதுள்ள ஆங்கிலமும் வெவ்வேறு. ஆனால் மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு எந்தத் தமிழை நாம் பேசினோமோ அந்த கன்னித் தமிழையே இன்றும் பேசுகிறோம்; என்றும் பேசுவோம். ஒரே விதமான நடையுடன், ஒரே விதமான ஜீவ சக்தியுடன் வளர்ந்து வந்திருக்கும் தமிழ் மொழியைப் பெற்ற நாம் பெரும் பாக்கியசாலிகள்" என்று கூறினார் ஸ்ரீ கல்கி.

இரண்டாவது நாள் மகாநாட்டில் ஈழ நாட்டின் தமிழ்ப் பற்றையும் தமிழ் அபிமானத்தையும் கண்டு தாம் திகைத்துப் போனதாக ஸ்ரீ கல்கி ஒப்புக்கொண்டு, "இந்தியாவில் இனி நடக்கும் எந்தத் தமிழ் விழாவும் ஈழ நாட்டு நல்லறிஞர்கள் வராது நடந்தால் பூர்த்தியடைந்ததாக நான் கருத மாட்டேன்" என்று கூறினார்.

இரண்டு நாள் கூட்டத்திலும் ஸ்ரீ பெரியசாமித் தூரனும் சொற்பொழிவாற்றினார். வீரகேசரி ஆசிரியர் ஸ்ரீ கே. பி. ஹரன் இரண்டாம் நாள் மகாநாட்டுக்குத் தலைமை வகித்துப் பேசுகையில் இலங்கைக்கும் இந்தியாவுக்கும் சேதுவை மேடுறுத்திப் பாலம் அமைக்காவிடினும் அறிஞர்களைப் பரிமாறிக்கொண்டு தமிழ்ப் பாலம் அமைப்போமென்றார். "வீரத் தமிழர்" என்பது பற்றி பண்டிதர் திரு க. வேந்தனாரும் "பிரிவால் பெற்ற பெரு நலம்" என்பது பற்றி பண்டிதர் திரு எ. பெரியதம்பிப் பிள்ளையும், "உமறுப் புலவரும் சீறாவும்" என்பது பற்றி ஜனாப் எம். எஸ். சமால்தீனும் வேறு பல அறிஞர்களும் பேசினர். ஐயாயிரத்துக்கு மேற்பட்ட தமிழர்கள் வந்திருந்து தமிழ்த் திருவிழாவை இவ்வளவு சிறப்பாக நடத்தி வைத்ததை ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி பாராட்டினார். "இலங்கையின் தமிழன்பை இதுவரை நான் அறியேன். வந்தேன்; கண்டேன்; கண்டதை இந்தியாவுக்குப் போய்ச் சொல்லுவேன். எங்கள் தாய்நாடு உவகை பெறும்" என்று தமது முடிவுரையில் ஸ்ரீ கல்கி கூறினார்.

# ஸ்ரீ ராமகிருஷ்ண உபநிஷதம்



## 24. "மாடுகள் அசை போடுவதுபோல்"

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

**ப**சுவானது பால் தருகிறது. இந்தப் பால் பசுவின் உடலில் ஓடும் ரத்தத்தில் கலந்து, அதன் உடல் முழுவதுமே இருக்கிறது. ஆயினும் பசுவின் காதைப் பிழிந்தால் பால் வருமா? வராது. பசுவின் மடியில்தான் பால் சுரக்கும். உலகமெல்லாம் கடவுள் மயம் என்பது உண்மை. ஆயினும் பசுவின் உடலில் பால் சுரக்கும் மடியைப் போன்றது, புண்ணிய க்ஷேத்திரங்களின் மகிமை. அங்கே பக்தர்கள் சென்று, அந்த ஸ்தலங்களில் சுரக்கும் பக்தியைப் பெற்று, பகவானை அடைகிறார்கள். தலைமுறை தலைமுறையாகப் பல பக்தர்கள் தவமும் தியானமும் செய்த அந்த ஸ்தலங்களில் ஆண்டவன் தன் தரிசனத்தை எளிதில் தருகிறான். எண்ணற்ற பக்தர்களுடைய தவம், ஜபம், தியானம், பூஜை, பிரார்த்தனை இவற்றின் புகை அங்கே படிந்து நிற்கிறது. அது அவ்விடம் பக்தியுடன் செல்லும் மக்களின் உணர்ச்சியைத் தன் மயமாக்கும். பக்தர்களின் கால் தூசி பட்டாலுமே போதும் என்று சொல்வது இதுதான். கோடிக்கணக்கான பக்தர்கள்: படித்தவர்கள், படிப்பில்லாத பாமரர்கள், விழுந்து புரண்டு வழிபட்ட இடங்களுக்குத் தனியொரு சக்தி உண்டு. உலக வாழ்க்கையையும், ஆசைகளையும் நீக்கி உள்ளம் உருகி ஆடியும் பாடியும் புனிதமாக்கிய ஸ்தலங்களுக்கு நாமும் சென்று நம் உள்ளத்தை ஆண்டவன் பாதங்களில் சமர்ப்பித்தால் நம்முடைய கல் மனமும் உருகும். ஆனபடியால் அத்தகைய இடங்களில் எங்கும் பரவி நிற்கும் ஈசனை எளிதில் காணலாம்.

பூமியை எங்கேயும் தோண்டி ஜலம் எடுக்கலாம். ஆனால் சில இடங்களில் ஏற்கெனவே கிணறும் குளமும் ஏரியும் தயாராக இருக்கின்றன. அவற்றை நாம் அடைந்து சுலபமாகத் தாகம் தணித்துக் கொள்ளலாம் அல்லவா? — அப்படியே கோயில்களும் க்ஷேத்திரங்களும், தீர்த்தங்களும். பக்தி தாகத்தை அவ்விடங்களில் சிரமமில்லாமல் தீர்த்துக் கொள்ளலாம்.

க்ஷேத்திரங்களைச் சரியான முறையில் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். மாடுகள் வயிறு நிறையப் புல் மேய்ந்து விட்டு ஒரு இடத்தில் படுத்து அசை போடுவது போல், புண்ணிய ஸ்தலங்களுக்குப் போய் பூஜை முதலியவை செய்தான பிறகு ஸ்தல மகிமையின் பயனாக அடைந்த புனித எண்ணங்களை நாம் அசை போட வேண்டும்.

யாத்திரை முடிந்ததும் கடமை தீர்ந்து விட்டது என்று எண்ணி பக்தியையும் புனித எண்ணங்களையும் அங்கேயே விட்டு விடாமல், தனிமை

யான இடத்தைத் தேடி உட்கார்ந்து, தியானத்தில் மனதைச் செலுத்தி அடைந்த பக்தியை ஊர்ஜிதப்படுத்திக் கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் அடைந்த பயனைச் சீக்கிரத்தில் இழந்து விடுவோம்.

புண்ணியஸ்தலங்களுக்குப் போவதில் மட்டும் அல்லது அங்கே குடியிருப்பதில் மட்டும் பயன் அடைய முடியாது. உள்ளத்தின் நிலைமையே முக்கியம். உள்ளத்தில் பக்தி இருந்தாலொழிய ஸ்தல விசேஷத்தின் பயனை அடைய மாட்டோம். உள்ளத்தில் பக்தியிருந்தால் புண்ணியஸ்தலங்களில் அதை விருத்தி செய்து கொள்ளலாம். அந்த பக்தி ஐவேஜு உள்ளத்தில் இல்லாத பட்சத்தில் எந்த க்ஷேத்திரத்துக்குப் போவதிலும் ஒன்றும் பிரயோஜனமில்லை.

வீட்டில் சண்டை பிடித்துக் கொண்டு பையன் காசிக்கோ, வேறு புண்ணிய ஸ்தலத்துக்கோ ஓடிப் போகலாம். அங்கே வேலையில் அமர்ந்து பணம் சம்பாதிக்கலாம். பிறகு தாய் தகப்பனுக்கும் கொஞ்சம் அனுப்பலாம். ஆனால் இது வேறு, பக்தி சம்பாதிப்பது வேறு.

ஒரு சமயம் ஸ்ரீ ராம கிருஷ்ணர் வேடிக்கையாகச் சொன்னார்: "நானும் மதுராநாதரும் மேற்கே ஒரு புண்ணிய ஸ்தலத்துக்குப் போனோம். அங்கே மாமரங்களும் மூங்கில் புதர்களும் நம்முடைய ஊரில் இருப்பது போலவே தான் இருந்தன. வித்தியாசம் ஒன்றும் நான் காணவில்லை. ஆனால் ஒரு விசேஷம். இந்தப் புண்ணிய ஸ்தலங்களில் குடியிருக்கும் ஜனங்களுக்கு நல்ல ஜீரண சக்தி. எவ்வளவு சாப்பிட்டாலும் ஜரித்துக் கொள்ளுகிறார்கள்" என்றார். பக்தி செய்யாமல் புண்ணிய ஸ்தலங்களில் இருப்பதில் ஒரு விசேஷமுமில்லை என்பதை எடுத்துக் காட்ட இப்படிச் சொன்னார்.




## 8. பூமி கிடுகிடுத்தது!

பருன் நியூனஸினுடைய மலர்க் கரத்தை மெதுவாகத் தன் ஒரு கையில் எடுத்துக் கொண்டான். பிறகு தனது மற்றொரு கையினால் இலேசாக அவளுடைய மலர்க் கரத்தைத் தடவிக் கொடுத்தான். பூப் போன்ற நியூனஸின் மென் கரம் எங்கே? 'சொற சொற' வென்றிருக்கும் பருனின் முரட்டுக் கை எங்கே? அதற்கும் இதற்கும் ஈடு கட்ட முடியுமா? பெண்மையையும் மலரின் மென்மையையும் சேர்த்துப் படைத்த பிரம்ம தேவனின் பெருமையை என்னவென்று உரைப்பது? சிறிது நேரம்வரை இருவருமே ஒன்றும் பேசவில்லை. பிறகு பருன் மிகவும் மெதுவான குரலில், "நான் பருன். என்னைக் கண்டு மக்கள் கதிகலங்குகின்றனர். நான் என் சக்தியுடனும் சோபையுடனும் நிமிர்ந்து கம்பீரமாக நிற்கும் பொழுது, உலகமே என் காலடிகளில் விழுந்து பணியத் தொடங்கிவிடுகிறது. மக்கள் கோயில்களில் உள்ள தெய்வச் சிலைகளை வேண்டுமானாலும் நேருக்கு நேர் நிமிர்ந்து தைரியமாகப் பார்ப்பார்கள். ஆனால் என்னை நிமிர்ந்து கண் உயர்த்திப் பார்ப்பதென்றால், அவர்களுக்குக் குலைநடுக்கம் தான். பருனைத் தலை நிமிர்ந்து நேருக்கு நேர் நின்று பார்க்க இனிமேல்தான் இன்னொருவன் பிறந்து வரவேண்டும். இன்று வரை நான் எந்தப் பொருளையும் வேண்டியதும் இல்லை; விரும்பியதும் இல்லை. நான் இன்னது வேண்டும் என்று வாய் திறந்து விரும்பிக் கேட்காமலேயே என் தேவைகள் அனைத்தும் பூர்த்தி செய்யப்பட்டு வந்திருக்கின்றன. ஆகவே, விருப்பம் என்றால் என்ன என்று உணரும் சக்தி கூட எனக்கு இல்லாமற் போய்விட்டது.

"ஆனால் இன்று முன் இரவு உன்னைப் பார்த்தேன் அல்லவா? அப்பொழுது தான் முதன் முதலாக, மனிதனுடைய மனதில் ஏதாவது ஒரு பொருள் வேண்டும் என்று இச்சை ஏற்பட்டு விட்டால், அதை அடையும் விஷயத்தில் அவன் மனம் என்ன பாடுபடுகிறது என்பதை உணர முடிந்தது. அப்பப்பா! இதயத்திலே எழும் இச்சைக்குத்தான் என்ன சக்தி! ஆளை எப்படி யெல்லாம் படாத பாடு படுத்திச் சக்கையாக வாட்டிப் பிழிந்து விடுகிறது! உன்னைப் பார்த்த அந்த க்ஷணம் முதல் என் மனதிலே என்ன என்ன வெல்லாம் நிகழ்ந்திருக்கிறது, தெரியுமா? எனக்கு இரவு முழுவதும் தூக்கமே பிடிக்கவில்லை. தூக்கத்தை எப்படியாவது வருவித்து விட வேண்டும் என்று படுக்கையில் புரண்டு புரண்டு பார்த்தேன். எத்தனையோ பிரம்மப் பிரயத்தனங்களும் பகீரதப் பிரயத்தனங்களும் செய்து பார்த்து விட்டேன். இருந்தாலும் கண் மூடினால்தானே?

# ரூபவதி பி. எஸ். ஸரோஜா தனது அழகான சருமத்தைப்பாதுகாக்க

# லக்ஸ் டாய்லட் சோப்பையே

## தேர்ந்தெடுத்திருக்கிறார்




***இதோ அவர் ஏன் என்று உங்களுக்கு சொல்கிறார்!***

**"நான் லக்ஸ் டாய்லட் சோப்பிற்கு மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன். நான் இந்த சுத்தமான காரமற்ற சோப்பின் மென்மையான வெண்நுரை எவ்வளவு அதிசயமானமுறையில் சரும அழகை பாதுகாக்கிறது என்று அறிந்து கொண்ட நாளிலிருந்து என் சருமத்தை பாதுகாக்கும் வேலையை லக்ஸ் டாய்லட் சோப்பிடம் ஒப்படைத்திருக்கிறேன். மேலும், லக்ஸ் டாய்லட் சோப்பின் பரிமளம் உண்மையாகவே மகிழ்ச்சி தருகிறது."**

☆ ***இனிய மணத்துடன் கூடிய இந்த வெண்மையானதும் சுத்தமானதுமான சோப் உங்கள் சருமத்தையும் வசீகரமாக செய்யும்!***

LTS. 248-172 TM

**சினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப்**

உன்னைப் பார்த்தது முதல் தூக்கம் என்னை விட்டு அகன்றுவிட்டது. இரவு முழுவதும் உன் உருவமும் தோற்றமும் தான் என் கண்களெதிரே நடனமாடிக் கொண்டிருந்தன. ஒரு கணம் கூட உன் உருவம் என் கண்களை விட்டு அகலவில்லை. 'உன்னைப் பிரிந்து இவ்வளவு நேரம் நாம் எப்படி உயிர் வாழ்ந்தோம்? எப்படித்தான் நம்மால் உயிர் வாழ முடிந்தது?' என்பதைப் பற்றியேதான் நான் இரவு முழுவதும் சிந்தித்துக் கொண்டிருந்தேன்.

"நியூனஸ்! நீ என் உடல், என் உயிர், என் பொருள், என் ஆவி, என் வாழ்க்கை எல்லாவற்றுக்குமே ஒரு அங்கமாக ஆகிவிட்டாய் என்பதை வானுலகத்துத் தெய்வங்கள் கூட நன்கு அறியும். என் மாளிகையின் அந்தப்புரத்திலே எத்தனையோ பதுமைகள், 'நாங்களும் பெண்கள்!' என்று சொல்லிக்கொண்டு நடமாடித் திரிகின்றன. கொஞ்சிக் குலாவிப் பேசுகின்றன. இன்பக் கேளிக்கைகள் புரிய என்னிடம் வருகின்றன. அவை என் அருகில் வரும்பொழுது, அதாவது இன்னொரு விதமாகச் சொல்லப் போனால் அவர்களை நான் என் அருகில் வருமாறு உத்தரவிடும் பொழுது, என் உள்ளத்திலே இதோ இருக்கும் இந்தக் கருங்கல் சுவருக்கு ஏற்படும் உணர்ச்சி கூட உண்டாவதில்லை. ஆனால் உன்னை...... ஆமாம், ஏ அடிமை ஜாதிப் பெண்ணே! உன்னைப் பார்த்தபின் தான் என்னுடைய உள்ளத்திலும், 'நானும் ஒரு ஆண் மகன். என் உடம்பிலும் இதயம் என்று ஒன்று இருக்கிறது. அந்த இதயத்தின் ஆழத்திலும் உள்ளம் என்று ஒரு அறை இருக்கிறது. அந்த உள்ளத்திலே ஒருவருக்கு இடம் கூட இருக்கிறது' என்பது தெரிந்தது. அழகிற் சிறந்த அடிமை ஜாதிப் பெண்ணே! அந்த இடத்தை நீ ஆட்கொண்டு விட்டாய். என் உள்ளக் கோயிலில் நீ இடம் பெற்றுவிட்டாய்.

"உலகம் என்னைத் தெய்வம் என்று எண்ணி வழிபடுகிறது. நேற்று வரை நானும் என்னைப்பற்றி அப்படித்தான் எண்ணி வந்தேன். இந்த மண்ணுலகத்திலே பிறந்து வாழ்ந்து மரித்து மண்ணாகும் ஆத்மாக்களுக்கும் நமக்கும் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசம் இருக்கிறது என்றே எண்ணினேன். ஆனால் நீ என் இதய ராணியாக ஆனது முதற் கொண்டு என்னுடைய அந்த எண்ணம் அடியோடு அகன்றுவிட்டது. நீ சிறுகச் சிறுக என் உள்ளத்தை ஆக்கிரமித்து ஆட்கொண்டு விட்டாய். அதுமட்டும் அல்ல; கடைசியில் நீயே நான் வழிபடும் தெய்வமாகவும் ஆகிவிட்டாய். நான் எத்தனையோ நாடுகள் மீது படை யெடுத்து வெற்றி வாகை சூடி வந்திருக்கிறேன். வரும்



பொழுது அந்த நாடுகளிலிருந்து அழகில் அரம்பையர்களுக்கு ஒப்பான பெண்களைப் பொறுக்கிக்கொண்டும் வந்திருக்கிறேன். ஆனால் நான்கே நாட்களில் அந்த விளையாட்டுப் பொம்மைகளுடன் விளையாடி விளையாடி என்மனம் நினைத்துத் திகைத்து விட்டது; அலுத்துச் சலித்து விட்டது. அதற்கப்புறம் என் கண்களுக்கு அவர்களிடத்தில் எவ்விதமான மன மோகன மந்திர சக்தியும் இருப்பதாகத் தெரியவில்லை.

"காதல்! காதல்! இல்லையேல் சாதல்! சாதல்!" என்று சொல்லி ஜனங்கள் ஏன் இப்படி உயிரை விடுகிறார்கள் என்பது என் புத்திக்கு இதுவரை எட்டவேயில்லை. காதல் என்னும் சொல்லைக் கேட்டாலே எள்ளி நகையாடினேன்; பரிகசித்தேன். ஜனங்கள் இந்த வலையில் சிக்கி ஏன் தான் இப்படிக் காதல் பித்தர்களாகித் திரிகிறார்களோ!' என்று எண்ணி எண்ணி வியந்தேன். எவ்வளவோ மண்டையை உடைத்துக் கொண்டு பார்த்தும் கூட எனக்குக் காதல் என்று ஒன்று இருப்பதாகத் தோன்றவேயில்லை. ஆனால் உன்னைப் பார்த்ததும் என் உள்ளத்தில் இனம் தெரியாத அன்பு ஒன்று சுரந்து வந்தது. அதுதான் காதலாக இருக்க வேண்டும் என்று எண்ணினேன். அந்தக் கணம் முதற்கொண்டு என் உள்ளத்தில் நீ காதலரசியாக வீற்று விட்டாய். அதற்கப்புறம் தான் மற்ற மண்ணுலக வாசிகளைப் போல நானும் மனிதன்தான் என்ற எண்ணம் என் உள்ளத்திலே இடம் பெற்றது. என் மார்பகத்திலும் சாதாரணமாக எல்லோரையும் போலவே மனம் என்று ஒன்று இருக்கிறது. அதுவும் உணர்ச்சி வசப்பட்டுத் துடிக்கிறது; அதைரியப்படுகிறது; கலங்கிக் கவலைப் படுகிறது. ஆவலை அடக்க மாட்டாமல் அவல நிலைமையுறுகிறது என்பதெல்லாம் எனக்குத் தெளிவாக விளங்கியது. ஆகவே நியூனஸ்! நீ ஒரு உணர்ச்சியற்ற, மரத்துப் போன உள்ளம் படைத்தவனின் கண்களைத் திறந்து கருணை புரிந்திருக்கிறாய். தன் இச்சைக்கு அவனை அடிபணியச் செய்து உன் கைப்பாவையாக ஆக்கிக்கொண்டு விட்டாய். இதை எண்ணி நீ மகிழ்ச்சி கொள்ளலாம்; சந்தோஷப் படலாம். உணர்ச்சியற்றவனை உணர்ச்சி பெறச் செய்த பெருமை உன்னைச் சேர்ந்தது. நீ சந்தோஷப் படுவதில் சிறிதும் தவறில்லை.

"நான் உலகத்தின் கண்களுக்கு வேண்டுமானால் மிக மிகச் சக்தி வாய்ந்தவனாகத் தோன்றலாம். உலகத்தின் உயர்ந்த பாதுஷாக்களில் தலைசிறந்தவனாகவே தோன்றலாம். உலகம் என்னைத் தெய்வம் என்றே எண்ணிக் கொண்டாடலாம்; வழிபடலாம். ஆனால் நீ தான் எனக்குக் காதல் தெய்வம். நான் உன்னைக் கொண்டாடுபவன். வழிபடுபவன். என் தெய்வமாகிய உன் ஆணையைச் சிரமேற் கொண்டு இனி மேல் நான் நடப்பேன். எழுந்திருந்து என் அரண்மனைக்கு வா. என் மேல்கருணைசெய். திரை மறைவில் இருந்து கொண்டு ஆட்டி வைக்கும் பொம்மலாட்டப் பொம்மையின் சூத்திரதாரி போல நீ உன் இஷ்டப்படியெல்லாம் என்னை ஆட்டி வை. இனி நான் உன் அடிமை; நீ ஆட்டுவிப்பது போலெல்லாம் நான் ஆடத்தயார். இன்று வரை நான் என் சக்தியிலும் சோபையிலும் செல்வச் செருக்கிலும் இறுமாப்புற்று உயிர் வாழ்ந்தேன். இன்று முதல் நான் அன்பிலும் அன்பை வழிபடுவதிலும் உன்

## நல் வரவு!



ணத்தைச் செலவிட்டு உலகத்திலே உயிர் வாழ விரும்புகிறேன்" என்றான்.

பருன் அன்று வரை யாரிடமும் அவ்வளவு நீண்ட பிரசங்கம் செய்ததேயில்லை. அதுவும் சர்வ சகஜமாகச் சாதாரண மனிதனைப் போல அவன் பேசி யாருமே கண்டதில்லை. அவனுடைய மன நிலையை அவனுடைய விழிகள் வெகு அழகாக எடுத்துக் காட்டிக் கொண்டிருந்தன.

நியூனலோ பெண். எந்தப் பெண்ணும் தன் அழகின் வெற்றியில் பெருமிதம் கொள்ளுவது சகஜம்தானே? அதுவும் தன் காலத்தில் உள்ள மிக மிகப்பெரிய பாதுஷாவைத் தன் காலடிகளில் பணிய வைப்பது என்றால் தன் அழகின் வெற்றியை எண்ணி எந்தப் பெண்தான் இறுமாப்புக் கொள்ள மாட்டாள்? ஆனால் நியூனலோ அதற்கு முன்பே காதல் உலகத்தில் காலடி எடுத்து வைத்து விட்டாள். காதலர் இருவருக்கும் ஏற்பட்ட காதல் பந்தயத்திலே தன் மனதையும் மனத்தின் விருப்பங்களையும் பணயம் வைத்துப் பறி கொடுத்தும் விட்டாள். அதுமட்டுமா? பந்தய வெறியிலே தன்னையே பணயம் வைத்துக் காதலனுக்கு அர்ப்பணம் செய்து அவனுடைய அடிமையாகவும் ஆகி விட்டாள். ஆகவே பெண்ணுலகத்தின் இணையற்ற இந்த வெற்றியில் அவளுக்கு எள்ளளவும் மகிழ்ச்சி ஏற்படவில்லை. அவள் சிறைச்சாலையின் மேடும் பள்ளமும் சொற சொறப்பும் வாய்ந்த தரையில் தன் முழங்கால்களை மண்டியிட்டுக்கொண்டு, "எகிப்து நாட்டின் இணையற்ற சக்கரவர்த்தியே! நீ மனம் வைத்தால் உனக்கு உலகத்தில் உள்ள மிகமிக உயர்ந்த அழகிகள் கிடைப்பது கூட வெகு சுலபமாயிற்றே! அப்படி யிருக்கும் பொழுது அடிமையான என்னைக் கைபிடிக்க நீ விரும்புவானேன்? என்னிடத்தில் உன்னுடைய உள்ளத்தைக் கொள்ளை கொள்ளக் கூடிய சகதி ஒன்றும் இருப்பதாகத் தெரியவில்லையே!" என்றாள்.

பருன் மிகவும் மெதுவாக, ஆனால் திடமும் திட்டமும் தோய்ந்தகுரலில், "பருன் செய்யும் காரியம் அனைத்தும் உலகத்துக்கு ஆதர்சமாக—எடுத்துக் காட்டாக ஆகி விடும். பருன் செய்யும் செயல்கள் அனைத்தையும் காளாவட்டத்தில் பிறர் பார்த்துப் பின் பற்றத் தொடங்கி விடுவார்கள். தெரியுமா?" என்றான்.

"பாதுஷா! மறுபடியும் நீ நீர ஆலோசித்து முடிவுக்கு வர வேண்டும். 'கேவலம் ஒரு அடிமைப் பெண்ணுக்காக நாம் இவ்வளவெல்லாம் செய்கிறோமே, அது நியாயமா?' என்று சிந்தித்துப் பார்!" என்றாள் நியூனஸ்.

"சிந்தித்துப் பார்க்க வேண்டிய அவசியமே இல்லை. பருன் அந்த அடிமைப் பெண்ணை எகிப்து நாட்டுப் பட்டமகிஷியாக ஆக்கிக் கொள்வான். அவன் வைத்ததுதான் சட்டம்!" என்றான் பருன்.

"ஆனால் அந்த அடிமைப் பெண்ணின் உள்ளத்தில் பருன் மீது அன்பே ஏற்படாமலிருந்துவிட்டால்...?" என்றாள் நியூனஸ்.

"பருனின் அன்பு அவளுக்கு எல்லாவற்றையும் கற்றுக் கொடுத்து விடும்" என்று பதில் அளித்தான் பருன்.

நியூனஸ் சற்றுத் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, "அந்த அபாக்கியவதிக்கு வேறு யாரிடமாவது முன்பே காதல் ஏற்பட்டிருந்தால்...?" என்றாள்.




பருன் அந்தப் பதிலைத் தன் பெருமைக்குப் பங்கம் விளைவிக்கும் பதிலாகக் கருதினான். பார்த்துக் கொண்டிருக்கும் பொழுதே அவனுடைய முகத்தின் நிறம் மாறிவிட்டது. மூக்குப் புடைத்தது! கண்கள் சிவந்தன; உதடுகள் துடித்தன. அவன் சட்டென்று நாற்காலியிலிருந்து எழுந்து நின்றான். அப்பொழுது பூமியே அதிர்ந்தது. அவன் தன் கால்களால் பூமியை ஓங்கி உதைத்தான்.

அவன் பற்களை 'நறநற' வென்று கடித்துக் கொண்டு, "பருன் அந்த ஆளை எகிப்து நாட்டில் உள்ள மிகப் பெரும் கருங்கல்லுக்குக் கீழே நிறுத்தி நசுக்கிக் கொன்று விடுவான்!" என்றான். அதைக் கேட்டதும் நியூனஸுக்குப் பூமியே இடி இடித்தது போலிருந்தது. (தொடரும்)




## 1. மகாராஜனுகப் போய்வா!

சூரிய வெளிச்சம் சுள்ளென்று முகத்தில் அடித்தது. நகுலன் கண்களைத் துடைத்துக் கொண்டு போனால் போகிறது என்று எழுந்திருந்தான். 'அடே! இவ்வளவு நேரமா நாம் தூங்கினோம்?' என்று அவன் வெட்கப்படவில்லை; வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்திருக்கவும் இல்லை. "நேற்றைவிட இன்று சூரியன் சீக்கிரமாக உதித்து விட்டான் போலிருக்கிறது! இந்தச் சூரியனுக்கு வேறு வேலையே கிடையாதா? என்னத்துக்கு என் தூக்கத்தைக் கெடுக்க இப்படி ஓடிவர வேண்டும்?" என்று முணு முணுத்துக் கொண்டேதான் அவன் எழுந்திருந்தான்.

நகுலன் அவ்வளவு சீக்கிரம் எழுந்து ஒன்றும் ஆக வேண்டியது இல்லை என்று அவன் அம்மா கூட நினைத்தாள். அவன் சீக்கிரம் எழுந்து தான் என்ன செய்யப் போகிறான்? கண்ணைக் கசக்கிக் கொண்டே கோடை வாய் வழியச் சற்று நிற்கப் போகிறான்; பல் தேய்க்க என்று சொல்லிக் கொண்டு வேப்ப மரத்தில் ஏறி ஒரு கிளையையே முறித்து எறியப் போகிறான்; பிறருக்குத் தண்ணீர் விடாமல் குழாயடியில் 'ஊட்டி' அடித்துப் பத்துப் பேருடைய வயிற்றெரிச்சலுக்கு ஆளாகப் போகிறான்!

"அம்மணி, உன் பிள்ளையின் அசட்டுத் தனத்தைப் பார்த்தாயா? ஓடும் தண்ணீரில் ஆற்றுப் பாலத்தின் மீது ஏறித் தலை குப்புறக் குட்டிக்கரணம் போடுகிறான். உனக்கு இருப்பது ஒரு பிள்ளை! சொல்லி விட்டோம்" என்று இரண்டு பேர் வந்து சொல்லி விட்டுப் போவார்கள்!

"இதோ பார்! உன் பிள்ளையை அடக்கி வை. வீண் வம்புக்கு எல்லாம் வருகிறானும். 'வவ்வவ்' என்று என் குழந்தையைப் பார்த்து அழகு காட்டுகிறானும்!" என்று யாராவது அவன் மீது 'குற்றப் பத்திரிகை' வாசித்து விட்டுப் போகப் போகிறார்கள்!"

பொழுது விடிந்து அஸ்தமித்தால் இதே வேலை தான்! நகுலனின் தாயார் அம்மணி இப்படி எல்லாம் மனம் புழுங்குவாள். 'இந்த 'மகத்தான' அலுவல்களை ஆற்ற அவன் எப்பொழுது எழுந்திருந்தால் என்ன?' என்று அம்மணி நினைத்ததில் ஆச்சர்யம் இல்லையல்லவா?

நகுலனுக்குக் கிட்டத்தட்டப் பதினாறு வயது இருக்கும். இப்படி வயது ஆகிறதே! குடும்ப நிலை தெரியாமல் இஷ்டப்படி ஊர் சுற்றிக் கொண்டு இருக்கிறோமே என்று. அவனுக்குப் படவில்லை. வயதுக்குத் தகுந்த புத்தி வேலை செய்யவில்லை. தன்னை நினைத்துத் தாயார் எவ்வளவு துக்கப்படுகிறாள் என்று அவன் உணரவில்லை.

ஆனால் வேளை தவறாமல் சாப்பிட்டு விட்டுப் போகத் தெரியும். வம்பு-வழக்குகள் இழுத்துவிட்டுப் பின் கட்டு வழியாக வீட்டுக்குள் நுழைந்து



பரணிமேல் பதுங்கிக்கொள்ளத் தெரியும். நன்றாக இழுத்துப் போர்த்திக் கொண்டு தூங்கத் தெரியும். 'டடடா, டடடா' என்று சீட்டி அடிக்கத் தெரியும்.

குடும்பம் எப்படி நடக்கிறது! தன் தாயார் எப்படி எல்லாம் சிரமப்பட்டுச் சோறு சமைத்துப் போடுகிறாள் என்று தெரியாது!

அன்று இரவு எட்டு மணி இருக்கும். நகுலனின் தாயார் வாசற் திண்ணைக்கு அருகே நின்று கொண்டு யாருடனோ மனம் விட்டுப் பேசிக் கொண்டிருந்தாள். நடு நடுவே துக்கம் மேலிட்டு அழுதாள். "இந்தப் பிள்ளையை வைத்துக் கொண்டு நான் என்ன செய்வேன்? அவன் அப்பா தான் அப்படி என்றால், அதற்கு மேல் இருக்கிறான் பிள்ளையும்! இவனாவது நல்லபடியாக வளர்ந்து நாலு காசு சம்பாதிப்பான்; சற்று ஆறுதல் அடையலாம் என்று பார்த்தால் இப்படிக் கழிசடையாகப் போகிறானே!" என்று சொல்லி விம்மிக் கொண்டிருந்தாள். கண்ணை மூடித் தூங்குவது போலப் பாவனை செய்து கொண்டிருந்த நகுலனுக்கு அம்மா சொன்னது அவ்வளவும் கேட்டது. 'அப்பா தான் அப்படி என்கிறாளே, அம்மா! அதற்கு என்ன அர்த்தம்?' என்றெல்லாம் கண்ணை மூடிக்கொண்டே யோசித்துப் பார்த்தான்.

நான்கு ஐந்து வருஷங்களுக்கு முன்னால் எப்பவோ ஒருநாள் அப்பாவைப் பார்த்தது, இராத்திரி அவர் வந்தது, அம்மாவோடு இரைந்து பேசியது, பிறகு போய் விட்டது எல்லாம் அவனுக்குக் கனவு போல இருந்தது. பொழுது விடிந்து அம்மாவை "அப்பா எங்கே?" என்று கேட்டான் நகுலன். "அவர் வெளியூருக்குக் கப்பல் ஏறிப் போய்விட்டார்; வருவதற்கு இரண்டு, மூன்று வருஷங்கள் பிடிக்கும் என்று சொல்லிவிட்டு முகத்தை அப்பால் திருப்பிக் கொண்டு அழுதாள், அவனுடைய அம்மா.



நகுலனுக்கு எல்லாம் நன்றாக நினைவு இருக்கிறது. "ஆமாம், அம்மா எதற்காக அழுகிறாள்? இன்னும் அப்பா திரும்பி வரவில்லையே என்பதற்காக அழுகிறாளா? அல்லது நான் இப்படிச் சோம்பேறியாக எதுவுமே சம்பாதிக்காமல் இருக்கிறேனே, அதற்காக அழுகிறாளா...?"

நகுலன் துள்ளி எழுந்தான். அவனுடைய தூக்கம் எல்லாம் எங்கேயோ பறந்துவிட்டது. புது நகுலனாகவே மாறிவிட்டான். அடுத்த கணம் அவன் "அம்மா!" என்று கூப்பிட்டுக் கொண்டே பின்னால் ஓடினான்.

அம்மணி ஆச்சரியப்பட்டாள். அவளுக்குத் தெரிந்து இந்த நேரத்தில் நகுலன் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருப்பான். இன்று என்னமோ விழித்துக் கொண்டிருப்பதுடன் புதுக் குரல் போட்டுக் கொண்டு பின்னால் ஓடி வருகிறானே? எதற்கு அடிப் போடுகிறானோ? மாரியம்மன் திருவிழா



வுக்குப் போக வேண்டும் என்று காசுக்கு வந்து நிற்கிறானே! ஸினிமாவுக்குப் போகச் சில்லறைக்குத் தேங்குகிறானே! இவ்வாறெல்லாம் எண்ணினாள். சற்று மிரண்டபடி, "என்னடா, என்ன வேணும்?" என்று கேட்டாள்.

நகுலனுக்குத் துக்கம் தொண்டையை அடைத்தது. என்னமோ சொல்ல வாயெடுத்தான். வார்த்தை வரவில்லை. "அ...ம்...மா!" என்றான் மீண்டும். கண்களில் கண்ணீர் பிதுங்கி நின்றது.

அம்மணிக்குத் திக்கென்றது. ஏதாவது தப்புத்தண்டா செய்து விட்டு வந்து விட்டானா, என்ன? அவன் விழிக்கும் விழியும், திக்கித் திணறுவதும் அவளுக்கு என்னமோ செய்தது.

"ஏன் நகுலா! என்ன? யாரையாவது, என்னவாவது செய்து விட்டாயா?" என்று கேட்டுப் பதறினாள்.

"இல்லையம்மா! எனக்கு ஒன்று தெரிந்து கொள்ள வேண்டும் என்று வெகு நாட்களாக ஆசை. அதைத் தெரிந்து கொண்டு நான் சம்பாதிக்க வெளியூருக்குப் போகப் போகிறேன். நான் பழைய அசட்டு நகுலன் இல்லை. அடியோடு மாறி விட்டேன். நீ சற்று முன்னால் அடுத்தவீட்டு மாமியிடம் சொல்லிக் கொண்டிருந்தது எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டுதான் இருந்தேன். ஏன் அம்மா! அப்பா எங்கே? அப்பாதான் அப்படி என்றால் அதற்கு மேல் இருக்கிறான் பிள்ளையும் என்று சொல்லிக் கொண்டிருந்தாயே! என்ன அம்மா விசேஷம்?" என்று படபடப்புடன் கேட்டான் நகுலன்.

அம்மணி ஆச்சர்யப் பட்டாள். 'தூங்குமூஞ்சி நகுலனா இந்தக் கேள்வி கேட்கிறான்? இப்படிக் கேட்க அவனுக்கு எப்படித் தோன்றியது?' என்று நினைத்தாள். "எங்கேயோ வெளியூருக்குப் போயிருக்கிறார் என்ற வழக்கமான பதிலையே சொல்லிவிட நினைத்தவள், என்ன நினைத்துக் கொண்டாளோ என்னவோ! அந்தப் பதிலைச் சொல்லவில்லை. பையனுக்கு ஏற்பட்டிருக்கும் இந்தப் புது விழிப்பை நன்றாகப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்று எண்ணினாள் போலும். எத்தனை நாட்களுக்குத்தான் அந்த இரகசியத்தை மூடி மூடிக் காப்பாற்றிக் கொண்டு, தானே மனம் புழுங்குவது என்று நினைத்தாள்.

"சொல்லிவிடு, சொல்லிவிடு!" என்று அவளுடைய உதடுகள் துடித்தன. "ஆமாம், இதுதான் தக்க தருணம்!" என்று உள்ளமும் அவற்றுடன் சேர்ந்துகொண்டு சொல்லிற்று.

"நகுலா! உன் அப்பா ஒரு திருடர். இப்போது அவர் சிறையில் இருக்கிறார்" என்று பொங்கி வரும் அழுகையுடன் சொல்லி விட்டு, "போ! போய்ப்படுத்துக் கொள்!" என்றாள்.

"என்ன! என்ன! அவர் திருடரா?" என்று நகுலன் கேட்டதற்கு அம்மணி பதில் சொல்லவில்லை. விம்மிக் கொண்டிருந்தாள். நகுலனுக்குத் தூக்கம் வரவில்லை. இரவெல்லாம் குருட்டு யோசனை செய்து கொண்டிருந்தான்.

பொழுது விடிந்தது. நகுலன் பளிச்சென்று படுக்கையை விட்டு எழுந்திருந்தான். "அம்மா! எனக்கு அனுமதி கொடு. நான் எங்கேயாவது சென்று வேலைக்கு அமரப்போகிறேன்" என்றான்.

"குழந்தாய் நகுலா! மகராஜனாகப் போய்விட்டுவா. ஆனால் ஒரு விஷயம். பொய் சொல்லாதே; திருட நினைக்காதே. உன் அப்பாவோடு அந்தக் களங்கம் மறையட்டும்! அம்மா பிள்ளையாகச் சமத்தாக நடந்து கொள்ளு!" என்று சொல்லி அனுப்பினாள்.

"சரி, அம்மா!" என்று சொல்லி விட்டுத் தாயை வணங்கி விட்டு 'விர்' என்று கிளம்பினான் நகுலன். அவனுக்கு எங்கிருந்தோ புதுச் சுறு சுறுப்பும், நடையில் விறுவிறுப்பும் வந்தது. கால் போன போக்கில் நடந்தான்.

இருட்டு வந்தது. நகுலன் வழிப்போக்கர் தங்கும் சத்திரம் ஒன்றில் தங்க ஒதுங்கினான். 'நறுக்'கென்று காலில் ஏதோ குத்திற்று. 'ஹா!' என்று அலறிக் கொண்டே குனிந்து பார்த்தான். அது ஒரு குண்டூசி! இந்தச் சிறிய குண்டூசிக்குத்தான் எவ்வளவு சக்தி! என்னை அலறவைத்து விட்டதே! நான் இவ்வளவு பெரியவனாக இருந்தும் எதற்கும் பயன்படாதவனாக இருந்துவிட்டேனே!" என்று அந்தக் குண்டூசியைத் தன் சட்டையின்மேல் குத்திப் பத்திரப் படுத்திக் கொண்டான்.

நகுலனுக்குப் பக்கத்தில் இன்னும் சிலர் படுத்திருந்தார்கள். நடுநிசி. நகுலன் புரண்டு படுத்தான். சட்டை மேலிருந்த குண்டூசி 'நறுக்'கென்று குத்தியது. "ஹா!" என்று அலறிக் கொண்டே எழுந்தான். அதே சமயம் யாரோ ஒருவன் தட தடவென்று ஓடுவது போல இருந்தது. (தொடரும்)

## இரண்டு விடுகதைகள்

1. காயிருக்கக் கனியிருக்க
கனிந்த ராஜா மகன் இருக்க
இனியராஜா மகன் இல்லாமல்
இன்னும் சாப்பிடவில்லை.

2. தத்தகா தத்தகா
காலே கால்
தாண்டவம் ஆடினால்
இரண்டே கால்
மூற்றிப் போனால்
மூன்றே கால்
மூடிவில் சொன்னால்
பத்தே கால்.

சென்ற வார விடுகதைகளுக்கு விடை:
1. ரெயில்வண்டி.
2. நட்சத்திரங்கள்.

# புதிரும் புரொபஸரும்

ஒரு சமயம் ஒரு காலேஜ் புரொபஸருக்கு வெளியூர் போகவேண்டி யிருந்தது. அவர் மூன்றும் வகுப்பு வண்டியில் பிரயாணம் செய்து கொண்டிருந்தார். அவர் உட்கார்ந்திருந்த அதே பெட்டியில் அவருக்கு எதிர்த்தாற் போலிருந்த பெஞ்சியில் ஒரு குடியானவனும் உட்கார்ந்திருந்தான். அவனைப் பார்த்து, "சும்மா உட்கார்ந்திருப்பது என்றால் பொழுதேபோகவில்லை! பொழுதைப் போக்க ஏதாவது விடு கதை போடுவோமா?" என்று கேட்டார்.

"சரி!" என்றான் குடியானவன்.

"சும்மாப் போட்டால் சுவாரஸ்யப் படாது! ஒரு விடு கதைக்கு ஒரு ரூபாய் பந்தயம் வைத்துக் கொள்ளுவோம். என்ன, உனக்குச் சம்மதந்தானே?" என்று கேட்டார் புரொபஸர்.

"சாமி! நீங்களோ படிச்சவங்க! நானோ படிக்காத முட்டாள். நான் அரை ரூபாய்தான் தருவேன். சம்மதமானால் சொல்லுங்கள்!" என்றான் அந்தக் குடியானவன்.

"சரி!" என்று சம்மதித்து, முதலில் குடியானவனையே புதிர் போடுமாறு கேட்டுக் கொண்டார் புரொபஸர்.

குடியானவன் புதிர் போட்டான்:—

"ஓகோகோ மரத்திலே
உச்சாணிக் கிளையிலே
ஒரு பறவை உட்கார்ந்திருக்குது,
இன்னொரு பறவை எட்டிப் பார்க்குது'
இதென்ன? சொல்லுங்கள், பார்க்கலாம்!" என்றான்.

புரொபஸர் யோசித்தார், யோசித்தார்; அப்படி யோசித்தார். ஆனால் அவருக்குப் புதிருக்கு விடை கிடைக்கவே யில்லை. கடைசியில் தன் தோல்வியை ஒப்புக்கொண்டு, குடியானவன் கையில் ஒரு ரூபாயை வைத்தார்.

அவன் ரூபாயை வாங்கிக் கொண்டு, எட்டணாவைக் கொடுத்தான்.



"என்ன, அப்பா இது! எட்டணா திருப்பித் தருகிறாயே!" என்று கேட்டார் புரொபஸர்.

"எனக்கும்தான் இந்தப் புதிருக்கு விடை தெரியாதுங்களே!" என்று சொன்னான் குடியானவன். —அக்ஷயம்.






இந்தப் படத்தில் என்னென்ன விளையாட்டுச் சாமான்கள் இருக்கின்றன? கண்டு பிடியுங்கள்!



பஞ்சு போன்ற பூ பறப்பதைப் பார்த்திருப்பீர்கள். அது விளையாட்டுக்காகப் பறக்க வில்லை. அதில் இருக்கும் விதையை இன்னொரு இடத்துக்கு எடுத்துச் செல்வதற்காகத் தான் பறக்கிறது.



ஆப்பிரிக்க நாட்டு முதலைகள் ஆகாரம் தின்ற பின் கரையில் வந்து வாயைத் திறந்து படுத்துக் கொள்ளும். அதன் பல் இடுக்குகளில் சிக்கியிருக்கும் ஆகாரப் பொருள்களைக் குருவிகள் கொத்தித் தின்னும். இது அதிசயம் இல்லையா?




மலைப் பாம்புக்குப் பலம் அதிகம். ஒரு குகையில் இருந்த மலைப் பாம்பின் வாலில் கயிற்றைக் கட்டி யானையைக் கொண்டு இழுக்கச் செய்தார்கள். கயிறு அறுந்ததே தவிரப் பாம்பு நகரவில்லை.



# காமு சொன்னாள்!

லக்ஷ்மி ராஜேந்திர சங்கர்

**வ**ழக்கத்திற்கு விரோதமாக அன்று காமு முன்னதாகவே வந்துவிட்டாள். பிரதி தினமும் நான் படுக்கை போட்ட பிறகுதான் வருவாள். ஆனால் அன்று மட்டும் ஏனோ விளக்கு வைத்து ஜபம் செய்து முடித்ததுமே வந்து விட்டாள். அவள் முகமும் நடையும் உற்சாகமற்றிருந்தது.

"என்ன காமு, இன்று உனக்கு உடம்பு சரியில்லையா, என்ன!" என்று கேட்டேன்.

"என் உடம்புக்கென்ன! ஒன்றையும் காணோம்!" என்று சலிப்புடன் கூறியபடி காமு சுவரோரமாகக் காலை நீட்டிக் கொண்டு உட்கார்ந்தாள். எதிர்ப்புறத்துச் சுவரில் ஸ்ரீ ராமரின் படம் மாட்டப்பட்டிருந்தது. அவள் சிறிது நேரம் அதையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள். பிறகு திடீரென்று, "ஏன், அக்கா! கண்டதும் காதல் என்று சொல்லுகிறார்களே, அதை நீங்கள் நம்புகிறீர்களா?" என்று கேட்டாள்.

"இதென்ன கூத்து! காமு, இன்றைக்கு நீ காதல் கதைகளாகவே படித்து நிறைந்து விட்டாய்போலிருக்கிறதே!" என்றேன்.

"அதெல்லாம் ஒன்றுமில்லை! கதையே யல்ல. உண்மையாக நடந்ததுதான்!"

"அப்படியா! பல வருஷங்களுக்கு முன் சில அறிவாளிகளும் பிரமுகர்களுமாக ஒன்று கூடிக் கண்டதும் காதல் என்பது உண்மையில் நடக்கக்கூடியதுதானா என்று சர்ச்சை செய்தனராம்."

"ஆனால் கடைசியில் என்ன முடிவாயிற்று?"

"முடிவா! ஒன்றும் உருவாகவில்லை. ராமாயணம், சாகுந்தலம் முதலியவற்றை அலசிப் பார்த்ததுடன் சரி!"

"அந்தப் பிரமுகர்களில் ஒருவர்கூடக் காதல் மணம் செய்து கொள்ள வில்லை போலும்! இந்தக் காலத்துப் பெண்களும் பையன்களும்தான் ஒரே காதல் மயமா யிருக்கிறார்களே!"

"ஏதேது, காமு! இன்று பெரிய விஷயமாக எடுத்திருக்கிறாயே! என்ன சமாசாரம்! யாருக்கு யார்மேல் காதல்!" என்றேன்.

"காதலாவது, மண்ணாவது! காதல் எல்லாம் முடிந்து சாதல் என்ற முடிவிற்கு வந்திருக்கிறதாம்!"

"வந்திருக்கிறதாம் என்றால் என்ன அர்த்தம்! எனக்கு ஒன்றுமே புரியவில்லையே! சற்று விவரமாகச் சொல்லேன்!" என்றேன் நான் மிகவும் ஆவலுடன்.

"நீங்கள் இன்னும் சாப்பிட வில்லையே! சாப்பிட்டுவிட்டு வாருங்கள், பிறகு சொல்லுகிறேன்" என்றாள் காமு.

"ஊஹூம்! இப்பொழுதே சொல்லி விடு! பிறகு சுவாரசியப்படாது!" என்று கூறிய வண்ணம் நானும் ஓர் தூண் ஓரமாகக் காலை நீட்டிக் கொண்டு உட்கார்ந்தேன்.

**கா**முவின் முகம் வழக்கம் போல் பளிச்சிட்டது. ஏதோ ஒரு புதுமையைக் கண்டவள் போன்ற உணர்ச்சியும் வேகமும் அவளது குரலில் தொனித்தது. நானும் ஆவலை அடக்க மாட்டாமல் அவளுடைய முகத்தையே கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தேன்.

"டாக்டர் குஞ்சிதபாதத்தை உங்களுக்குத் தெரியுமல்லவா! அவர் வீட்டுக்கு இன்று போயிருந்தேன். அங்கே ஒரே குழப்பமாயிருந்தது. விசாரித்ததில் அவர் சின்னப் பெண் கருணா ஏதோ மருந்தைத் தின்று தன்னை மாய்த்துக் கொள்ள முயற்சி செய்தாளாம்!"

"அட ராமா! எதற்காக அந்தப் பெண் மருந்தைத் தின்றதாம்!"

"காதல் பித்தம் தலைக் கேறியதுதான் காரணமாம்! ஒரு கணம் தப்பி யிருந்தால் செத்திருக்க வேண்டியதுதானாம்!"

"சரி; அப்புறம் என்ன நடந்தது, சொல்லு!" என்று கேட்டேன் நான்.

"சென்ற யுத்தத்தின்பொழுது குஞ்சிதபாதம் ராணுவத்தில் சேர்ந்தாரல்லவா! அப்பொழுது அவருடைய பெண்களில் மூத்தவள் காலேஜிலும், சின்னவள் மெட்ரிக்கிலும் பட்டணத்தில் படித்துக் கொண்டிருந்தார்கள். யுத்த சேவைக்குப் பெண்களைத் திரட்டுவதற்காக ஒரு சங்கம் வேலை செய்து வந்ததாம். சில நாளைக்கெல்லாம் அதன் மூலம் மதனாவும், கருணாவும் யுத்த சேவையில் சேர்ந்து எங்கெங்கேயோ சுற்றி, பல இடங்களில் வேலை பார்த்து வந்திருக்கிறார்கள். யுத்தம் முடிந்ததும் அந்தச் சங்கம் கலைந்து விட்டது. ஆனால் பெண்களிருவரும், ஆளுக் கொரு காதலர்களைத் தேடிக் காதல் கொண்டு விட்டனராம்!"

"நல்ல காரியம் செய்தார்கள்! உம்...அப்புறம்!"

"மதனா அதிர்ஷ்டவசமாக ஒரு டாக்டர் மீது காதல் கொண்டு, தன் தாய் தந்தையரின் அனுமதி பெற்று அவரை மணம் செய்து கொண்டு விட்டாள்!"

"அந்த மட்டில் கெட்டிக்காரிதான்!"

"ஆமாம்! ஆனால் பாவம், கருணாவின் காதல் கடைசியில் சாதலில் வந்து முடிந்து விட்டது! இந்தக் காலத்துப் பசங்களுக்கு ஒருவரைப் பார்த்தவுடனேயே எப்படித்தான் காதல் ஏற்படுகிறதோ! எனக்கு அது இன்னும் புரியாத புதிராகவே இருக்கிறது!" என்று சொல்லி நிறுத்தினாள் காமு.

"இதென்ன, இப்படிச் சொல்லுகிறாய்! இந்தக் காலத்தில் என்ன! பதினாயிரம் வருஷங்

களுக்கு மேலாகக் காதல் மணம்தான் நடந்து வந்திருக்கிறது. சீதை, தமயந்தி, சாவித்திரி முதலியவர்களுக்கெல்லாம் காதல் கல்யாணம் தானே நடந்திருக்கிறது! சகுந்தலையும் காதல் மணம் தானே புரிந்து கொண்டாள்!" என்று நான் கேட்டு வைத்தேன்.

"ஆமாம்! அந்தக் கதையெல்லாம் நானும் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால், அவர்களில் யாராவது குடியும் குடித்தனமுமாக இருந்தார்களா! அது போகட்டும்.... அப்பப்பா! அவர்கள் பட்ட கஷ்டங்களை நினைத்தாலே எனக்குக் குலை நடுக்கம் எடுக்கிறது. தவிரவும், அவையெல்லாம் வெறும் கதைகள் தானே! உண்மையில் நம் நாளிலாவது, அல்லது நம் பாட்டி காலத்திலாவது காதல் கல்யாணங்கள் நடைபெற்றதுண்டா! ஏதோ குலம், கோத்திரம், அந்தஸ்து முதலியவைகளைக் கவனித்துக் கொடுத்து விடுவார்கள். அவர்களும் சந்தோஷமாக வாழ்க்கையை ஓட்டிச் செல்வார்கள். இப்பொழுதெல்லாம் என்னடாவென்றால் மூன்று நாள் காதல் முப்பது நாள் சண்டை என்ற நிலைமையிருக்கிறது!" என்று எவ்விதமான அப்பீலுக்கும் கொஞ்சம் கூட இடமில்லாமல் கூறிவிட்டாள் காமு.

அதற்கு மேலும் விவாதிக்க எனக்கு மனமில்லை. ஆகவே, 'அது சரி! மேலே என்ன ஆயிற்று, சொல்லு!" என்று கேட்டேன்.

"இன்று மத்தியானம் ஒரு ரவிக்கை தைப்பதற்காக அவர்கள் வீட்டிற்குப் போயிருந்தேன். அங்கே ஒரே பரபரப்பாக இருந்தது. மதனனைக் கூப்பிட்டு மெள்ள விசாரித்தேன். 'ஒன்றுமில்லை! கருணா நேற்றிரவு ஸ்மரணையற்று விழுந்து விட்டான். இப்பொழுது தான் கண்ணைத் திறந்தான். அதனால் சற்றுக் காபராப்பட்டுப் போய்விட்டோம். நீங்கள் சற்றுப் பொறுத்து வாருங்களேன்!' என்றான். நானும் அவர்கள் வீட்டுக் கொல்லைப்புறமாக வீட்டுக்குத் திரும்பினேன். அப்பொழுது அவர்கள் வீட்டு வேலைக்காரி சின்னம்மாளும், தோட்டக்கார முனுசாமியும் ஏதோ 'குசு முசு' வென்று ரகசியம் பேசிக்கொண்டிருந்தார்கள். அவர்களிடமிருந்து கருணா ஏதோ விஷத்தைச் சாப்பிட்டு விட்டானென்றும், சரியான சமயத்தில் அறிந்து மாற்று மருந்து கொடுத்துக் காப்பாற்றி விட்டார்களென்றும் அறிந்து கொண்டேன். எனக்குத்தான் எந்த விஷயத்தையும் சரியாகத் தெரிந்து கொள்ளா விட்டால் நிம்மதி ஏற்படாது என்பது உங்களுக்குத் தெரியுமே! ஆகவே, மறுபடியும் அவர்கள் வீட்டுக்குள்ளே சென்றேன். சரஸ்வதியம்மாள் படுக்கையில் படுத்துக் கொண்டிருந்தாள். என்னைக் கண்டதும் 'ஓ'வென்று அழுதுவிட்டாள். பாவம்! நான் ஏதேதோ சொல்லித் தேற்றின பிறகு நடந்த சமாசாரத்தை விஸ்தாரமாகக் கூறினாள்:

"அவர் யுத்தகளத்திலிருந்து திரும்பி வந்ததும் முதன் முதலாகப் பெண்கள் இருவரையும் ஊருக்குத் திரும்பி வந்துவிடும்படி கடிதம் எழுதிவிட்டார். இருவரும் திரும்பி வந்தது முதல் அவர்கள் நடவடிக்கையில் மிகப் பெரிய மாறுதல் உண்டாயிருப்பதைக் கவனித்தோம். எவ்வளவோ அன்பும் ஆசையுமாக அப்பா அம்மாவிடம் ஒட்டிக்கொண்டிருந்த பெண்கள் அவரவர்கள் மனம்போன போக்குப்படிப் பேசவும் நடக்கவும் தொடங்கிவிட்டார்கள். அதிலும் சின்னப்பெண்ணைப் பற்றிக் கேட்கவே வேண்டாம். எப்பொழுதும் இரண்டு பெண்களும் தங்கள் காரியங்களையே முக்கியமாகக் கருதுவதும், சிநேகிதர்களைப் பார்க்கப் போவதும், அவர்களை வீட்டுக்கு அழைத்து வந்து நிலை தெரியாமல் நேருக்கு நேர் உட்கார்ந்து சிரித்துப் பேசுவதும் கொம்மாளம் அடிப்பதுமாக இருந்தார்கள். 'என்ன, ஏது!' என்று கேட்டு விட்டால் 'இந்தக் கேள்வியெல்லாம் உனக்கெதற்கு அம்மா! இது எங்கள் சொந்த விஷயம்' என்பார்கள். நம் காலத்தில் நாம் இப்படியா இருந்தோம்! எல்லாம் இந்த பாழாய்ப் போன படிப்பும் நாகரிகமும்தான் இதுகளை இப்படி ஆட்டி வைக்கிறது. அவர்களுடைய அப்பாவுக்கு இதொன்றும் பிடிக்கவில்லை. இருந்தாலும் என்ன செய்வது! வயது வந்த பெண்களிடம் ஏதாவது சொன்னால் ஒன்றுக்கொன்று விபரீதம் விளைந்து மானம் போய்விடுமோ என்று பயந்து பேசாமலிருந்து விட்டார். ஆயினும் பொறுக்க முடியாமல் அத்து மீறிப் போகும் போதெல்லாம் ஜாடைமாடையாக அவர் புத்திமதி சொல்லாமலும் இருந்ததில்லை.



சில மாதங்கள் கழித்துக் கருணா ஏதோ வேலை ஒப்புக் கொண்டு பட்டணத்துக்குச் சென்று விட்டான். போன வருடம் நான்



அவனைப் பார்ப்பதற்காகப் பட்டணம் போயிருந்தேன். அப்பொழுது அவன் ஒரு பையனை அழைத்து வந்தாள். பையன் பார்ப்பதற்கு நன்றாகத்தான் இருந்தான். ரொம்ப மரியாதையாகவும் பேசிப் பழகினான். அவன் எங்களைத் தன் வீட்டுக்கு வந்து போகும்படி வேண்டிக் கொண்டதன்பேரில் நானும் கருணாவும் ஒரு நாள் அவனுடைய வீட்டுக்குப்போயிருந்தோம். வீட்டில் அவன் தமக்கையும் தாயும் இருந்தனர். இருவரும் விதவைகள். அவர்கள் உபசாரம் செய்த விதமும் பேசின பேச்சும் எனக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. அவர்களுடைய பேச்சில் அல்பத்தனமும் ஆடம்பரமும் நிரம்பியிருந்தது. ஏதோ பையன் சம்பாதிக்கிறான் என்ற பெருமையைத் தவிர வேறு ஒரு பெருமையும் காணோம். அவர்கள் கருணாவை 'வாடி, போடி' என்று பேசி ரொம்பவும் உறவு கொண்டாடினார்கள். நானும்கூட இருந்ததனால் அவர்கள் பேசியது கருணாவுக்கே பிடிக்கவில்லை போலிருக்கிறது! 'கருணாவுக்கு எவ்வளவு பணம் இருக்கிறது! என்ன என்ன நகைகள் செய்வீர்கள்!' என்றெல்லாம் அவர்கள் என்னைக் கேட்டார்கள். முன் பின் தெரியாதவர்களிடம் நமக்கு இந்தப் பேச்செல்லாம் எதற்கு!' என்று நான் வாய் திறவாமல் இருந்துவிட்டேன்.

மறுநாள் நான் ஊருக்குத் திரும்பிவிட்டேன். கொஞ்ச நாட்கள் ஆனதும் கருணாவிடமிருந்து, தான் அந்த பையனைக் காதலிப்பதாகவும் அவனையே மணந்து கொள்ளப் போவதாகவும் கடிதம் வந்தது. பையன் பணத்துக்காகக் கல்யாணம் செய்து கொள்ள விரும்புகிறான் என்று சந்தேகித்துக் கருணாவின் அப்பா ஒரே பிடிவாதமாக, 'முடியாது' என்று சொல்லி விட்டார். அவர்கள் ஏழை என்பதற்காக நாங்கள் குறை கூறுவதாக எண்ணிக் கருணா எங்களுக்குக் காரசாரமாகக் கடிதம் எழுதினாள்.

நம்முடைய தகுதிக்கு தகுந்தவர்களா யில்லா விட்டால் ஒத்து வராது. ஏழை என்பதற்காக நாங்கள் தடுக்கவில்லை என்று எவ்வளவோ சொல்லிப் பார்த்தோம். ஆனால் அவளோ எங்கள் பேச்சுக்குச் செவி சாய்க்காமல் 'அவரை வரித்த மனது இனி வேறு யாரையும் நாடாது' என்றெல்லாம் புத்தகத்திலிருந்து ஒப்புவிப்பது போல் எங்களுக்கு எழுதினாள். ஆகவே நாங்களும் வேறு வழி தோன்றாமல் பட்டணம் சென்று வெகு அடக்கமாக அவளுடைய கல்யாணத்தை முடித்து வைத்தோம். ஆறு மாதங்களுக்கு முன்னால் அவள் கணவனுக்கு உத்தியோகம் போய் விட்டது. இருந்த ஓட்டை உடைசல் பாத்திரங்கள் எல்லாவற்றையும் விற்று எப்படியோ வயிறு கழுவி வந்திருக்கிறார்கள். அவர்களிடமிருந்த சொத்தும் அந்தப் பாத்திரங்களும் எவ்வளவு நாளைக்குத்தான் வரும்! கடைசியில் கருணாவைப் படாத பாடு எல்லாம் படுத்தி அவளுடைய நகைகளைப் பிடுங்கி விற்று வயிறு வளர்த்திருக்கிறார்கள். அதுவும் தீர்ந்துவிடவே, பெற்றோர்களைக் கேட்டுப் பணம் வாங்கும்படி அவளைத் தொந்தரவு செய்திருக்கிறார்கள். 'கஷ்டப்பட்டாலும் படுவோம். பெற்றோர்களிடம் பணம் கேட்க முடியாது' என்று கருணா மிகவும் பிடிவாதமாக மறுத்து விட்டாளாம். கைபிடித்த கணவனும் கருணாவை அடித்து உதைத்துக் கஷ்டப்படுத்தி யிருக்கிறான். அடித்தாலும், உதைத்தாலும் கைபிடித்த கணவனே கதி என்று இருந்திருக்கிறாள். எங்களுக்குத் தன் சிரமத்தைப் பற்றிக் கடிதமே எழுதவில்லை.

ஒரு நாள் கருணா எங்கேயோ வெளியே போயிருந்தவள் திரும்பிவந்து பார்த்தபொழுது வீடு பூட்டி யிருந்திருக்கிறது. அதைப் பார்த்து அவள் அக்கம் பக்கத்தில் விசாரித்திருக்கிறாள். மாமியாரும் நாத்தனாரும் ஊருக்குப் போயிருப்பதாகவும் திரும்பி வர ஒரு மாதம் ஆகும் என்றும் தெரிந்ததாம். நாலைந்து நாட்கள் ஒரு சிநேகிதியின் வீட்டில் தங்கி இருந்துவிட்டு, அவளிடமிருந்து கைச் செலவுக்குக் கடன் வாங்கிக் கொண்டு கருணா இங்கே வந்து சேர்ந்தாள்.

முதலில் எங்களுக்கு விவரம் ஒன்றுமே தெரியாது. கருணா சில நாட்கள் வரை தன் குடும்பத் தொல்லைகளையும் கஷ்டங்களையும் வெளிக் காட்டிக் கொள்ளாமல் ஏதோ சாக்குப் போக்குச் சொல்லிச் சமாளித்துக் கொண்டிருந்தாள். பெற்ற மனம் கேட்கிறதா! எவ்வளவோ புத்திமதிகள் சொல்லித் தேற்றினேன். பிறகு தான் அவள் தன் கணவனுக்கு வேலை போன விஷயத்தையும் குடும்பத்தின் சிரம தசையையும், தன் மாமியாரும் நாத்தனாரும் சொல்லாமல் கொள்ளாமல் ஊருக்குப் போய் விட்ட சமாசாரத்தையும் விவரமாகச் சொன்னாள். கண்டதும் ஏற்பட்ட காதல் தற்கொலை செய்துகொள்ளும் அளவுக்கு அவளுக்கு வெறுப்பை உண்டாக்கி விட்டது.

கொஞ்ச நாட்களாகவே, அவள் பித்தம் தலைக்கேறியவள் போல் இருந்து கொண்டிருக்

தான். சரியாகக் குளிப்பதோ சாப்பிடுவதோ இல்லை. எப்பொழுது பார்த்தாலும் தலையைப் பிடித்துக் கொண்டு ஏதாவது யோசனையின் ஆழ்ந்திருந்தாள். நான் அடிக்கடி அவளைச் சமாதானப்படுத்துவேன். 'ஏதோ நடந்தது நடந்து விட்டது. ஆற்றிக் கொள்ளாதே!' என்று தேற்றுவேன். என்ன தேற்றி என்ன பயன்! பெரியவர்கள் சொன்னதைக் கேட்காமற் போய்விட்டோமே என்று அவளுடைய மனச்சாட்சி அவளைக்குத்திக்காட்டியிருக்கிறது. பாவம்! அடிக்கடி அவள் 'அம்மா! நீ சொன்னதைக் கேட்காததன் பலனைத்தான் இன்று அனுபவித்துக் கொண்டிருக்கிறேன்!' என்று சொல்லிப் பெருமூச்செறிவாள்.

முந்தா நாள் அவன் பெயருக்கு ஒரு கடிதம் வந்தது. அதில் அவள் அழகான அகமுடையான் யாரோ ஒருத்தியைக் கட்டிக் கொண்டு அழுவதாகவும், அவளையே மணம் செய்து கொள்ளப் போவதாகவும் அவன் தோழி எழுதி யிருந்தான். அதைப் படித்ததி லிருந்து அவள் மனம் ஒரு நிலைகொள்ளாமல் தவித்திருக்கிறது. நேற்றிரவு அவள் தந்தையின் பீரோவிலிருந்து ஏதோ விஷ மருந்தை எடுத்துத் தின்று விட்டாள். நல்ல வேளை! அகஸ்மாத்தாக அவ்வழியே சென்ற மதனு அதைப் பார்த்துக் கூச்சல் போட்டு எல்லோரையும் எழுப்பி விட்டான். அவள் அப்பா உடனே ஏதோ மாற்று மருந்து கொடுத்துக் கடவுளருளால் என் வயிற்றில் பாலை வார்த்தார்.

இன்று காலைதான் அவள் அப்பா இனி அம்மாதிரிச் செய்வதில்லை என்று அவளிடமிருந்து சத்தியம் வாங்கிக் கொண்டார். 'என்ன பிரமாதம்! இப்பொழுதுதான் விவாக ரத்து அமுலுக்கு வந்து விட்டதே! வேறு நமக்குத் தகுந்த இடமாகப் பார்த்துக் கல்யாணம் செய்து வைத்துவிட்டால் போகிறது' என்றார் அவள் அப்பா. 'போதும், போதும்! இந்த ஒரு கல்யாணத்தில் கஷ்டப்பட்டது போதும். நமக்கோ பிள்ளை யில்லை. அவள் நமக்குப் பிள்ளையாகவே இருந்துவிட்டுப் போகட்டும்...!' என்று நான் சொன்னேன்" என்று சொன்னாள் சரஸ்வதி அம்மாள்.

* * *

மேற்படி சம்பவத்தை, ஒரே மூச்சில் கூறி முடித்த காமு, ஒரு நீண்ட பெருமூச்சுடன் "காலம் எப்படி யிருக்கிறது, பாருங்கள்!" என்று என்னைக் கேட்டாள்.

"தற்காலத்துப் படிப்பும், காதலும், சினிமாக்களுமாகச் சேர்ந்து நம் இளம் பிள்ளைகளின் மனதைக் கெடுத்து மானசீகக் கோட்டைகளைக் கட்டத் தூண்டுகிறது. அதன் விளைவு தான் இப்படி ஒரு சமூகத்தையே ஆட்டி வைக்கிறது!" என்றேன்.

காமு அதற்குள் சுவர் ஓரமாகப் படுத்து உறங்க ஆரம்பித்து விட்டாள். மனதின் பாரம் குறைந்ததும் எளிதில் தூக்கம் பிடித்துக் கொள்கிறது! நம் கதையை இப்படி சுபத்தில் தன்னை முடிகிறதில்லையே என்று எண்ணியபடி வேலைகளை முடித்துக் கொண்டு படுத்தேன். காதலும் சாதலுமாகச் சேர்ந்து என் மனக் கண்முன் வட்டமிட்டுக் கொண்டே யிருந்தன!

மகிழ்ச்சிதருவது.,.

# ஹிமாலயா புக்கே

## டாய்லட் பௌடரின்

## குளுமையான பரிமளம்




பரிமளத்தோடு கூடின, நேர்த்தியான ஹிமாலயா புக்கே ஆதர்ச டாய்லட் பௌடர்.பட்டுப்போல்மிருதுவானது. வேர்வையை உறிஞ்சுகிறது.உங்கள் சருமத்திற்கு ஆறுதலளித்து சுகத்தையும் தருகிறது.மேலும்மகிழ்ச்சிதரும் நீடித்துநிற்கும் பரிமளம் உங்களை வேலைநெருக்கடியான நாள் முழுவதும் மலர்ச்சியுடனும்,.கவர்ச்சியுடனும் இருக்கச்செய்கிறது.

இன்னுமொரு நேர்த்தியான இராஸ்மிக் தயாரிப்பு

HBT. 4-172-55 TM

# யாருக்கு உரிமை?

ரஸவாதி

“நல்ல சேதி வருகுது—நல்ல சேதி வருகுது—குடு குடு குடு குடு! இந்த வீட்டு அம்மாளுக்கு நல்ல காலம் பொறக்குது—குடு குடு!”

மேலெழுந்த வாரியாகத்தான் பலன்களைச் சொல்லிக் கொண்டு போனான் அந்தக் குடுகுடுப்பாண்டி.

வாசலில் கோலம் போட்டுக் கொண்டிருந்த செங்கமலத்தாச்சி நிமிர்ந்து அவனை ஒரு முறை பார்த்தாள்.

“ஆமாம், நல்ல காலம் பொறக்கும்னுட்டுத்தான் எதிர்பார்த்துக் கிட்டிருக்கு. ஆனா ஒண்ணையும் காணோம்! இந்த மூதேவியின் தலையிலே என்னதான் எழுதியிருக்கோ?” என்று அவள் வாய் முணுமுணுத்தது.

அப்போதுதான் பால்காரனிடமிருந்து பாலை வாங்கிக் கொண்டு உள்ளே திரும்பிய சாரதாவின் உள்ளத்தில் இந்த வார்த்தைகள் அம்பு போல் தைத்தன. அவள் கண்களில் நீர் துளித்தது. முன்றானையால் கண்ணீரைத் துடைத்துக் கொண்டே உள்ளே சென்றவள் சமையலறையில் பால் செம்பைக் கீழே வைத்ததும் துக்கம் தாங்காமல் விம்மலானாள். கூடத்திலிருந்த மாடப் பிறையில் கோலப்பொடி டப்பாவை ‘டக்’ கென்று வைத்து விட்டு உள் பக்கம் சென்ற ஆச்சி சமையலறையிலிருந்து எழுந்த விசும்பலைக் கேட்டு வெறுப்பின் அறிகுறியாகப் புருவத்தை நெரித்துக் கொண்டாள். விடுவிடென்று நேரே அழுதுகொண்டிருந்த சாரதாவின் அருகில் போய், “ஏண்டி பொண்ணே! இப்போ நீ என்னத்துக்கு அழறே? சும்மா அழுது அழுது எல்லாத்தையும் உருப்படியில்லாமல் ஆக்கிக்கிட்டிருக்கலாம்னு நினைப்பா? எழுந்திரு, எழுந்திரு! வேறே வேலை ஏதாச்சும் இருந்தா பாரு!” என்று கடுகடுத்தாள்.

இதனால் சாரதாவின் அழுகையும் பொருமலும் அதிகமாயிற்றே ஒழிய ஓயவில்லை. அப்போதுதான் உள்ளே நுழைந்த கந்தசாமி செட்டியார், “இந்தா, ஏய்! குழந்தையை என்ன சொல்லிக்கிட்டிருக்கே? ஏன் அழுகிறது அது?” என்று பரபரப்புடன் கேட்டவாறே சாரதாவை நெருங்கினார்.

“ஆமாம், சொல்லிட்டாங்க! அதது அந்தந்த இடத்திலே இருந்தாத்தானே வாழ்வு? படிப்பு, படிப்புன்னு அடிச்சிக்கிட்டயளே, அதன் பலனைப் பார்த்தீர்களா? புருசங்கிட்ட சண்டை போடத்தான் அந்தப் படிப்பு உதவுது!” என்று கோபத்துடன் பொரிந்து கொட்டி விட்டுக் கொல்லைப்புறம் போய் விட்டாள் ஆச்சி.

“அழாதே அம்மா, சாரதா! சும்மா இப்படி அழுதால் உடம்பு என்னத்துக்கு ஆகும்? அந்த மடையனுக்காக நீ வெட்டியில் அழுது என்ன லாபம்?” என்று உருக்கமாகச் சொல்லியவாறே செட்டியார் அவள் தலையை அன்புடன் தடவிக் கொடுத்தார். “அப்பா!” என்று வாய் விட்டலறியவாறு அவர் மார்பில் தன் முகத்தைப் புதைத்துக் கொண்டு தன் துக்கத்தையெல்லாம் கண்ணீராகக் கரைத்துக் கொட்டினாள் சாரதா.

## 2

விஷயம் ஒன்றும் பிரமாதமானதல்ல. கோபாலனும் சாரதாவும் மிகவும் அன்னியோன்னியமாகத்தான் குடும்பம் நடத்தி வந்தனர். படித்த மனைவி என்பதனால் கொஞ்சம் மரியாதைகூட அவளுக்குக் கொடுத்திருந்தான் கோபாலன். ஒரு நாள் தம்பதிகளிடையே விளையாட்டாக ஆரம்பித்த பேச்சு விபரீதமாக முற்றி விட்டது. யாரேனும் ஒருவர் விட்டுக் கொடுத்தால் விபரீதம் ஏது? ஆனால் இருவருமே மற்றவர்தான் விட்டுக் கொடுக்கட்டுமே என்று எண்ணியதால் வந்த விளைவுதான் அது! சாதாரணப் பெண்ணானால் எப்படி இருந்திருக்குமோ என்னமோ, படித்த பெண்ணாகையால் சாரதாவுக்குப் பிரமாதமாக ரோஷம் வந்து விட்டது. அத்துடன் கோபமும் துணை நின்றது. சில நிமிஷங்கள் வீடு பூராவும் திமிலோகப் பட்டது. சாரதா தன் பிறந்த வீட்டிற்குக் கிளம்பி விட்டாள்!

ஆனால் கடைசியில்தான் வந்தது சங்கடம். இவ்வளவு அமர்க்களத்திலும் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்த குழந்தை ராமுவை எடுத்துக் கொள்வதற்காகச் சாரதா தொட்டிலண்டை வந்தபோது, சட்டென்று முன்னே பாய்ந்தான் அவள் கணவன் கோபாலன்.

“என்ன?” என்றாள் சாரதா திடுக்கிட்டவாறு.

“முடியாது!”

“என்னது?”

“அதுதான்!—முடியாது — கூடாது!”

“என் குழந்தை...!”

"யார் சொன்னது? இது என் குழந்தை! போவதானால் நீ மட்டும் வெளியே போ! இவன்மீது உனக்கு யாதொரு வித உரிமையும் கிடையாது!"

இவ்வளவு நேரம் கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டிருந்த துக்கம் எல்லை மீறிவிட்டதோ என்று எண்ணும்படி, ஒரு விம்மலாக வெளிவந்தது சாரதாவினிடமிருந்து. பாசத்திற்கும் வைராக்கியத்திற்கும் ஒரு பெரும் போராட்டம். கடைசியில் சாரதா பெரு முயற்சியுடன் தன் தாயுள்ளத்தைப் பிடிவாத மென்னும் கவசத்தைப் போட்டு மூடிவிட்டு, "இனி உங்கள் முகத்தில் விழிப்பதில்லை!" என்று ஆக்ரோஷத்துடன் சொல்லியவாறு வெளியேறினாள். அவள் வாசற்படி தாண்டும்போது கோபாலன் ஏளனமாக, "ஜாக்கிரதை! வேண்டுமானால் ஒரு ஜட்கா வைத்துக் கொண்டு போ!" என்றான். சாரதா திரும்பி அவனை ஒரு முறை கட்டெரித்து விடுவதுபோல் பார்த்தாள்.

விளையாட்டுப் போல் மூன்று மாதங்கள் ஆகிவிட்டன. இந்தக் குறுகிய காலத்திற்குள் கோபாலன் மிகவும் சிரமப்பட்டுப் போய்விட்டான். பௌருஷத்தினால் பெண்ணுக்கு ஆண் இங்கு இளைப்பில்லை என்று காண்பித்தானே ஒழிய, பின்னால் அவன் மனம் வெகுவாகச் சங்கடப்பட்டது. குழந்தையை எப்படியாவது சமாதானப் படுத்தி விடலாம் என்று முதலில் எண்ணியவன், அது எவ்வளவு சிரமசாத்தியமானது என்பதைப் பிறகுதான் உணர முடிந்தது. எத்தனை நாட்களுக்குத்தான் அவன் உருட்டலும் மிரட்டலும் குழந்தையிடம் செல்லும்? கடைசியில் வெற்றி அதற்குத்தான்!

"அம்மா, அம்மா!" என்று கதறிக் கதறி உடம்பக்கு வந்துவிட்டது குழந்தைக்கு. 'டெம்பரேசர்' ஏகத்திற்கு இருக்கிறதே என்று டாக்டர்கூடக் கவலைப்பட்டார்.

டாக்டரை அழைத்து வந்ததும் அவர் அவனைக் கேட்ட முதல் கேள்வி, "குழந்தையின் தாயார் எங்கே?" என்பதுதான். கோபாலனின் முகத்தில் அப்போது லேசாக அசடு தட்டியது. ஏதோ பதில் சொல்லி மழுப்பிவிட்டான். ஆனால் அவன் மனதில் 'குழந்தைக்கு என்ன வந்தாலும் சாரதாவை ஒருநாளும் போய்க் கூப்பிடுவதில்லை!' என்று தீர்மானம் செய்து கொண்டான்.



"தாத்தா! கொரியாப் போரில் தளபதி மக் ஆர்தரின் உதவிக்கு ஆள் தேவையா யிருக்கிறதாம். 'உங்களை அனுப்பி வைக்கலாமா?' என்று கேட்கிறாள் அம்மா!"

## 3

இங்கே இரண்டு நாட்களாகச் சாரதாவுக்கு வீட்டில் இருப்பே கொள்ளவில்லை. வந்த புதிதில் ஊரார்—ஏன், தகப்பனார் கூட, அவள் துணிச்சலுடன் குழந்தையையும் கணவனையும் பிரிந்து தனியே வந்ததைக் குறித்துத் தங்கள் அதிருப்தியை வெளியிட்டனர். படித்த பெண் அதையெல்லாம் உதறித் தள்ளிவிட்டு அலட்சியமாக இருந்தாள். பெண் தானே இருந்தும் என்று செட்டியார் இருந்துவிட்டார். அவருடைய இளைய மனைவி செங்கமலத்தாச்சியோ சமயம் வந்தபோதெல்லாம் கடுபாணமாக எரிந்து விழுந்தாள்.

மெள்ள மெள்ளத்தான் சாரதாவுக்குத் தன்னுடைய நிலைமை புலப்பட்டது. என்னதான் இருந்தாலும் புருஷனில்லாவிட்டால் பெண்ணுக்கு மதிப்பும், வாழ்வும் கிடையாது என்பதைப் படிப்படியாக உணர ஆரம்பித்தபோது, அது அவளுக்கு மிகவும் வேதனையாக இருந்தது. தான் செய்த தவறு அவளுக்குப் புலப்பட ஆரம்பித்தது. நடந்ததை நினைத்துப் பார்த்து மிகவும் வெட்கப்பட்டாள் அவள். தான் விட்டுக் கொடுத்திருக்க வேண்டியதுதான்; ஆனால் அவர் 'குழந்தையைத் தொடாதே!' என்றாரே, அதுமட்டும் நியாயமா?

ஆனால் அதே சமயம் தாய்ப்பாசம் குழந்தையைப் பார்க்க வேண்டும் என்பதற்காகக் கணவன் காலில் விழுந்து கெஞ்சினாலும் பரவாயில்லை என்ற ஒரு எண்ணத்தை ஒரு புறம் உண்டாக்கியது. மனதிற்குள் எண்ணங்களின் போராட்டம்; அதனால் குழப்பம். இந்த நிம்மதியற்ற போக்கு அவளது நடவடிக்கைகளிலேயே




தெரிந்தது. ஆச்சி, புளியை எடு என்றால் உப்பை எடுத்தான்; அம்மியில் பொடி செய்து வா என்றால் ஆட்டுக் கல்லில் போட்டு அரைத்து வந்தான்!

அன்றொரு நாள் வாசற்புறத்திலிருந்து "சாரதா!" என்று கூப்பிட்டுக்கொண்டே உள்ளே வந்தார் செட்டியார்.

"சமாசாரம் கேட்டியா, அம்மா?" என்றார்.

பரபரப்புடன் கைகளைக் கழுவிக் கொண்டு, "என்ன அப்பா?" என்று வினவியவாறே தந்தையை நெருங்கினாள் சாரதா.

"குழந்தை ராமுவுக்கு ஒரு வாரமாகக் கடுஞ் சுரமாம்! அடுத்த தெரு சுப்பையா பிள்ளை நேற்றுத்தான் ஊரிலேயிருந்து வந்திருக்காரு. அவர்தான் சொன்னாரு!"

"இது என்ன, அப்பா!" என்று பதறினாள் சாரதா.

"அயோக்கியன்! குழந்தைக்கு இப்படி உடம்புன்னு ஒரு வார்த்தை தெரிவித்தானா, பார்த்தாயா? திருட்டுப் பயல்!" என்று பல்லைக் கடித்தார் செட்டியார்.

"குழந்தைக்கு என்ன உடம்போ என்னவோ? பாவி நான் உயிரோடு இருந்தும் இப்போ அவன் பக்கத்திலே இருந்து கவனிக்காமல் இங்கே இருக்கிறேனே!" என்று குமுறினாள் சாரதா.

"அழாதே அம்மா, சாரதா? குழந்தையின் உடம்புக்கு ஒன்றும் இருக்காது. அந்தப் பழனி ஆண்டவன் இருக்கிறான். கவலைப்படாதே!" என்று மகளைத் தேற்றினார் செட்டியார்.

"அப்பா! இன்று ராத்திரியே போகலாம், அப்பா! அவர் கோபித்துக்கொண்டாலும் பரவாயில்லை. குழந்தையை ஒரு தடவையாவது பார்த்தால்தான் என் மனசு சமாதானமடையும்" என்று அவள் சொல்லும்போது, செட்டியாரின் கண்களில்கூட நீர் கசிந்தது.

"சரி அம்மா, போவோம். பெண்ணைப் பெற்றவர்களும், பெண்ணாகப் பிறந்தவர்களும் நோவப்பட்டால் முடியாதுதான்!" என்று ஒரு பெருமூச்சு விட்டார்.

## 4

கூடத்தில் கைகளைப் பின்புறம் கட்டியவாறு குறுக்கும் நெடுக்குமாக முகத்தில் சிந்தனையின் ரேகை படர நடந்து கொண்டிருந்தான் கோபாலன். உள்ளே தொட்டிலில் குழந்தை மூச்சு விடத் திணறிக் கொண்டிருந்தது. நிமிஷத்திற்கொரு தரம் "அம்மா, அம்மா!" என்று அது அரற்றிக் கொண்டிருந்தது.

கொஞ்ச நாட்களாகவே அவன் மனதும் ஒரு நிலையில்லாமல் தத்தளித்துக்கொண்



“இதோ பார், இந்த வரிக் குதிரை தான் ஹாலந்து தேசத்திலிருந்து வந்திருக்கிறது!”

“ஏன், அப்பா! உனக்குப் பின்னால் நின்று கொண்டிருக்கும் அந்த மாமிகூட ஹாலந்து தேசத்திலேயிருந்து வந்திருக்கிறாளா?”

---

டிருந்தது. குழந்தையைப் பார்த்துக் கொள்வதற்காக ஊரிலிருந்து அவன் தன் அத்தையை வரவழைத்திருந்தான். அவளோ வயதானவள். கொஞ்சம் பார்வைக் குறைவும்கூட. இரண்டு வயதுக் குழந்தையை அவளால் சமாளிக்க முடியுமா? பெற்ற தாய்கூடச் சில சமயங்களில் திணறிப் போவாளே!

“தாயார் அருகிலில்லாவிட்டால் குழந்தையின் ஏக்கம் எப்படி நீங்கும்?” என்று டாக்டர் ஒரு நாள் ஏளனமாகக் கோபாலனைக் கேட்டபோது, அவனுக்கு ஆயிரம் ஊசிகளால் ஒரே சமயத்தில் குத்தினது போல் இருந்தது. அவருக்குக்கூடப் பகிரங்கமாகத் தெரியும்படியாக அவ்வளவு முட்டாள்தனமா செய்துவிட்டேன், நான்? அவன்மீது தப்பே இல்லையா? ஆனால் குழந்தை—அது யாருக்கு உரியது? தாய்—பெற்றாள்; வாஸ்தவந்தான். அதற்காக? ஆனால் தகப்பன்?—குழந்தை தனக்குப் பயப்படுகிறதே யொழிய, தாயிடம் காட்டும் வாஞ்சையைத் தன்னிடம் காட்ட மாட்டேன் என்கிறதே? இது என்ன விசித்திரம்?

இவ்விதம் பலவிதமாக யோசனை செய்ததின் பேரில் பைத்தியம் பிடித்தவன்போல் கோபாலன் தலையைப் பிய்த்துக் கொண்டான். அதே சமயம் வாசற் கதவு தட்டப்பட்டது!

“யார்?”

எவ்வளவுதான் துணிச்சலுடன் குழந்தையைப் பார்ப்பதற்காகப் புறப்பட்டு வந்தாலும் வாசற்படி ஏறியவுடன் சாரதாவின் இதயம் வேகமாக அடித்துக் கொண்டது. நாக்கு மேலண்ணத்தில் ஒட்டிக் கொண்டது. தொண்டையிலிருந்து சத்தமே எழும்ப மறுத்துவிட்டது. எச்சிலை விழுங்கியவாறே நின்றாள் சாரதா. செய்வதறியாது அவள் பின்னே சும்மா நின்றுகொண்டிருந்தார் செட்டியார்.

“யார் அது என்கிறேனே?” என்ற குரல் கேட்டது உள்ளிருந்து. மறுகணம் ‘தடக்’கென்று தாழ்ப்பாள் திறந்து கொண்டது. கையில் விளக்குடன் நின்று கொண்டிருந்த கோபாலனின் கண்களும் சாரதாவின் கண்களும் சந்தித்தன. ஏதோ ஒரு எதிர்பாராத அதிர்ச்சியால் இருவரும் தலை குனிந்தனர்.

சாரதா மிரண்ட பார்வையுடன், “மன்னியுங்கள்; ஒரு தடவை! ஒரு முறை குழந்தை ராமுவைப் பார்த்துவிட்டுப் போய் விடுகிறேன்!” என்று சோகம் ததும்ப நடுங்கும் குரலில் சொன்னாள்.

“உள்ளே வா!” என்று கம்மிய குரலில் சொல்லிவிட்டு முன்னே விளக்குடன் சென்றான் கோபாலன். பின்னால் பரபரப்புடன் வந்த சாரதா புடவைத் தலைப்பு இடறுவதையும் கவனிக்காமல் பாய்ந்தோடி வந்து குழந்தையை எடுக்கக் கைகளை நீட்டினாள். தாயைக் கண்டதும் குழந்தை ராமு கண்களை அகல விரித்துக் கொண்டு கைகளை நீட்டியவாறே எழுந்திருக்க முயன்றான்.

குழந்தையை வாரி மார்புடன் அணைத்துக் கொண்டு அதன் முகத்துடன் தன் முகத்தைப் பதித்தாள் சாரதா. குழந்தையின் கண்களிலும் அவள் கண்களிலும் ஏககாலத்தில் நீர் பெருகியது. அதைப் பார்த்து அப்படியே அயர்ந்து நின்று விட்டான் கோபாலன். வாய் விட்டுப் பேச முடியாத குழந்தை கண்ணீர் மூலம் தன் உணர்ச்சியைக் காட்டி விட்டதைப் பார்த்தபோது அவனுக்கு வியப்பாக இருந்தது. தன்னையுமறியாமல் அவன் குழந்தையின் கண்ணீரைத் துடைத்தான். அடுத்த கணம் அவன் கை சாரதாவின் கன்னத்தில் வழிந்திருந்த கண்ணீரைத் துடைத்தது!

“சாரதா! முட்டாள் நான். குழந்தை ஏதோ என்னுடைய உரிமைப் பொருள் என்று எண்ணினேன். அது தப்பு; நம் இருவருக்கும் அது உரியது—பொது! அதனால்தான் நம் அன்பின் பிணைப்பு இறுகுகிறது என்பதை என்னால் இப்போதுதான் உணர முடிகிறது. என்னை மன்னித்துவிடு!” என்றான் கோபாலன் நாத் தழுதழுக்க.

சாரதா எல்லையற்ற மகிழ்ச்சியுடன் குழந்தை ராமுவை மார்புடன் இறுக அணைத்துக் கொண்டு, தன் கணவனை ஏறிட்டுப் பார்த்தாள்!

# கல்யாணக் கசப்பு



## பி.எஸ்.ராமையா

எனக்கு வயது இருபது நிறைந்துவிட்டது. எனக்குக் கலியாணம் ஆகவே ஆகாதோ என்ற ஏக்கத்தில் அம்மா இடிந்து போயிருக்கிறாள். "நல்ல வரன். அனேகமாக முடிந்து போயிருக்கும். கையில் சிக்கியது இப்படி நழுவி விட்டதே! இந்த விதிக் கொடுமைக்கு யாரைக் குற்றம் சொல்லுவது!" என்று அப்பா பிரலாபித்துக் கொண்டிருக்கிறார்.

ஆனால் என் வரையில் இந்தக் கடைசி வரன் கைதவறிப் போனதில் சந்தோஷம்தான். அதை வாய்விட்டு யாரிடமாவது சொல்ல முடியுமா!

பெண் பார்க்க வீட்டு வாசல் வரை வந்த வரன் திடீரென்று முரண்டு திரும்பிவிட்டதில் எனக்குத் திருப்தியும் சந்தோஷமும் எப்படி ஏற்பட்டிருக்க முடியும் என்று விவரம் தெரியாதவர்கள் நினைக்கலாம். ஏன், என்னைப் பெற்றவர்களுக்கே அது புரியாதே!

என் தந்தை குப்புசாமி அய்யர் என் தாயை மணம் செய்து கொண்ட காலத்தில் ஒரு செட்டியார் வீட்டில் கணக்குப் பிள்ளையாக இருந்தார். சொற்ப சம்பளம்தான். இருந்தாலும் அந்தக் காலத்தில் நல்ல பதவி என்றுதான் கருதப்பட்டது. அதனால்தான் என் தாயாரின் பெற்றோர்கள் அவருக்குப் பெண்ணைக் கொடுத்தார்கள்.

செட்டியார் வீட்டுக் கணக்குப் பிள்ளைக்கு வருஷா வருஷம் சம்பள உயர்வு எவ்வளவு கிடைத்துவிடும்! அதற்காகக் குடும்பம் பெருகாமலிருக்குமா! எட்டு வருஷங்களுக்குப் பிறகு அப்பாவுக்குப் பத்து ரூபாய் வருமானத்தில் உயர்வு. வீட்டிலே ஐந்து குழந்தைகள். அதில் நான்கு பெண்கள். நான்தான் மூத்தவள். அடுத்தது என் தம்பி வெங்கிட்டு.

நம்முடைய தேசத்திலே ராஜாங்கப் பொருளாதார நிலைமைகளைப் பற்றிப் பேசுகிறார்கள், பத்திரிகைகளில் எழுதுகிறார்கள். காலேஜுகளில்கூடப் பொருளாதாரம் என்பதைப் பற்றியே விசேஷமாகப் படித்துப் பட்டம் வாங்கக்கூட வசதி இருக்கிறது. ஆனால் யாராவது தனி ஆள், அல்லது குடும்பத்தினுடைய பொருளாதார நிலைமைகள், ஆகியவற்றைப் பற்றி யோசித்து இளைஞர்களிடம் சரியான மனோபாவம் வளரும்படி செய்ய முயற்சி செய்கிறார்களா!

பையனுக்குப் பெண்ணைக் கொடுக்கப் போகும் தகப்பனார் அப்போதைக்குப் பையன் வருமானத்தைப் பார்த்துத் திருப்தியடைந்து விடுகிறார். "நூறு ரூபாய் சம்பளம். வருஷத்திற்கு இரண்டோ மூன்றோ உயரும். நல்ல இடம்" என்று தன் மனைவியிடம் திருப்தியுடனும் பெருமையுடனும் சொல்லுகிறாரே! அவர் கணக்குப்படி புருஷன் மனைவி இருவருக்கும் மாதம் நூறு ரூபாய் போதும். ஆனால் எட்டு வருஷங்களில் மூன்று நான்கு குழந்தைகளாகும்போது அவன் வருமானம் நூற்றிருபத்தைந்துக்கு மேல் போய்விட முடியாது. நாலு குழந்தைகளுள்ள குடும்பத்துக்கு அந்த வருமானம் போதுமா! அந்தக் குடும்பத்திலே வாழ்க்கை வளமாக இருக்குமா!

அடே, பெண்ணைப் பெற்றவர்தான் அதைப் பற்றி யோசிக்கிறதில்லை. பையனைப் பெற்ற தகப்பன், என் பையனை இதைப் பற்றி யெல்லாம் யோசிப்பதுண்டா!

எங்கள் குடும்பத்தில் இதைப் பற்றி யாரும் யோசித்ததில்லை யென்று நிச்சயமாகச் சொல்லுவேன். அதன் பலனை நாங்கள் நிறைய அனுபவித்தோம். இன்னும் அனுபவிக்கிறோம். எப்பொழுது பாருங்கள், பஞ்சத்திலடிபட்டவர்கள்போலக் குழந்தைகள் பறந்துகொண்டேயிருக்கும். என்ன சாப்பிட்டாலும், எவ்வளவு சாப்பிட்டாலும் மனதில் திருப்தியே பிறக்காது.

கலியாணமாகி எட்டு வருஷம் அப்பா அதே வேலையிலிருந்தார். திடீரென்று ஒரு நாள் அதற்கும் தலைமை வலித்துவிட்டது. அப்பாவை வீட்டுக்குப் போகச் சொல்லி விட்டார்கள்.

அதன்பின் இரண்டு வருஷம் நாங்கள் பட்டிருக்கிற கஷ்டம் எழுதித் தொலையாது. ஏதாவது வேலை தேடித் தருவதாகச் சொல்லி அப்பாவைச் சென்னைக்கு அழைத்துக்கொண்ட மாமாவின் தலையில் எங்கள் குடும்ப பாரம் முழுவதும் சுமந்தது.

இரண்டு வருஷம் அலைந்து தேடிக் கடைசியில், ரங்கூனிலும் சென்னையிலும் கடைகளுடைய ஒரு முகம்மதியரிடம் அப்பாவுக்கு வேலை பிடித்துக் கொடுத்தார் மாமா. அங்கே நூறு ரூபாய் சம்பளம். ஆனால் சம்பள உயர்வு என்ற எண்ணத்திற்கே இடமில்லை. அங்கே சுமார் பத்து வருஷ காலம் உத்தியோகம் செய்தார். அதற்கும் ஒரு முடிவு வந்தது. அந்த வியாபாரி சென்னைக் கடையை மூடிவிட்டுப் பர்மாவுக்கே போய் விட்டார்.

மறுபடி ஆறுமாதம் அலைச்சல், கண்டவரிடம் கெஞ்சல், பல்லைக் காட்டல் எல்லாம் சரிவர நடந்தன. ஏதோ சர்க்கார் ஆபீஸ்

காரர்களுக்காக ஒரு காண்டீன் (ஹோட்டல்) ஆரம்பித்தார்கள். அதன் நிர்வாகப் பொறுப்புப் பதவி கிடைத்தது. அங்கே எழுபது ரூபாய்தான் சம்பளம். ஆனால் அது கிடைத்த தற்கே அம்மா பெரிய தெருப் பிள்ளையாருக்கு அபிஷேகம் நடத்திவைத்தாளே !

இந்தக் குடும்பத்தின் மூத்த பெண் நான். நானும் எனக்கு இளையவர்களும் எவ்வளவு தூரம் படித்திருப்போம் என்று நீங்களே யூகித்துக் கொள்ளலாம். ஏதோ பெயருக்கு நாலைந்து வகுப்புகள் உட்கார்ந்து விட்டு வந்தோம்.

வெங்கிட்டு ஆண்பிள்ளை, உத்தியோகம் தேடவேண்டியவன். அதனால் அவன் எஸ். எஸ். எல். ஸி. க்குப் போனான். என் கடைசித் தங்கை பேபி மாத்திரம் இரண்டாவது பாரத்தை எட்டி யிருக்கிறாள்.

படிப்புத்தான் அப்படி யென்றால் இந்தக் காலத்துப் பெண்களுக்கு இருக்கவேண்டிய யோக்யதாம்சங்கள் இருக்கின்றனவே, சங்கீதம், நடனம், இன்னும் இதுபோன்ற 'குவாலிபிகேஷன்'கள் — அவற்றைப் பற்றி என்ன சொல்ல ! அம்மாவுக்குத் தெரிந்த சில கலங்கு ஊஞ்சல் பாட்டுகளும், தெருத் தெரு வாய் முழங்குகின்றனவே, ஸினிமாப் பாட்டுகள் — அவற்றில் சிலவும் கற்றோர்கள் என்னுடைய சகோதரிகள்.

நானு ! தெய்வமே எனக்கு அதெல்லாம் வேண்டாமென்று முன் கூட்டியே தீர்மானித்து விட்டதே !

நான் பிறக்கும்போதே, என் மேலுதடு, மூக்குக்குக் கீழே அறுந்து பிளவு பட்டுப் போயிருந்தது. என் மூக்கறைக் குரலுக்குப் பாட்டும் கதையும் வேறு !—ஹும் !

*சுருமாகச்* சொல்லுகிறேன், பூர்வ ஜன்ம கர்ம பலனிஞல் எனக்கு. அந்த ஒச்சம் விழுந்து விட்டதானாலும், உருவ அமைப்பிலும் மற்ற அங்க அமைப்புகளிலும் எங்கள் குடும்பத்திலேயே நான்தான் அதிக அழகு. கையால் என் வாயை மறைத்துக் கொண்டு நான் கண்ணாடியில் பார்க்கும் போதெல்லாம் எனக்கு ஸினிமா ஸ்டார்... பெயர்தான் முன்னால் நிற்கும். அவளை விட நான் எவ்வளவோ அழகு என்று நிச்சயமாகச் சொல்லுவேன். என் தலையில் உள்ள கட்டுக் கூந்தலும், என் வளைந்த புருவங்களும், கருகரு வென்று சதா புரண்டு கொண்டிருக்கும் என் விழிகளும்..... தற்பெருமையல்ல ; அவ்வளவும் சத்தியம்.

ஒரு தடவை எங்கள் குடும்பம் முழுவதையும் சேர்த்து ஒரு போட்டோ எடுத்தார்கள். அதில் 'புரூப்' பிரதி வருமல்லவா ! அதை எடுத்து ஒளித்து வைத்துவிட்டேன். யாருக்கும் தெரியாமல் அதிலிருந்த என் படத்தில் உதட்டுக் குறையை மையினால் எழுதி மூடி யிருக்கிறேன். எப்படியோ அந்தப் படம் என் தங்கை பொருந்தி கையில் அகப்பட்டுவிட்டது. அதைப் பார்த்து விட்டு அவர்களெல்லாம் ஆடின ஆட்டம்.....!

"அப்ஸரஸ் மாதிரி இருக்காளேடி ; அவளுக்குப் போய் பகவான் இப்படிக் குறை வைத்து விட்டாரே!" என்று அம்மா இன்னும் அங்கலாய்த்துக் கொண்டிருக்கிறாள்.

அப்பா, "இதுதான் பெண் என்று காட்டினால் போதும். பெரிய ஹைகோர்ட்டு ஜட்ஜு பிள்ளைகூட 'நான் செய்து கொள்ளுகிறேன் கலியாணம்' என்று ஓடி வருவான். ஹூம்..." என்று பெருமூச்சு விட்டார், அதைப் பார்த்து விட்டு.

எனக்கு வயது பதினேழு நிறைந்து பதினெட்டு நடந்து கொண்டிருந்தபோது அப்பா எனக்கு வரன் தேடத் தொடங்கிவிட்டார். அப்போதுதான் அவர் சர்க்கார் ஆபீஸ்காரர்கள் காண்டீனில், வேலைக்குச் சேர்ந்திருந்தார்.

எங்கள் உறவிலேயே ஒன்றிரண்டு பிள்ளைகளைப் பார்த்தார். அவர்கள், தெய்வாதீனமாக எனக்கு ஏற்பட்டிருந்த அங்கஹீனத்திற்காக, விட்டுக் கொடுக்காமல் கை கொடுக்க முன் வருவார்களென்று எதிர்பார்த்தார். அவர்கள் அந்தக் காரணத்தைச் சொல்லாமல், வரதட்சிணை, அது இது என்று சொல்லி ஒதுங்கி விட்டார்கள்.

அதன் பிறகு அப்பா வெளியிலே வரன் தேடத் தொடங்கினார். அவருடைய செல்வ நிலைமைக்கும் என்னுடைய குறைக்கும் எப். ஏ., பி. ஏ. படித்த பிள்ளைகளா கிடைத்து விடுவார்கள்! பணத்தைக் கொட்டிப் படித்து விட்டு வேலை யில்லாமல் திண்டாடினால் கூட, கலியாணம் என்று வந்து விட்டால் அவர்கள் பேசுகிற பேச்சும், போடுகிற நிபந்தனைகளும் — அப்பப்பா!

என்மேல் நீங்கள் கோபம் கொள்ளுவதில் பயனில்லை. என் மனதில் படுவதை அப்படியப்படியே எழுதுகிறேன். நம்முடைய சமூகத்தில், கலியாணத்தைப் பற்றிப் பேசும் போது ஒருவருக்கொருவர் பரஸ்பரம் மனிதர்களாகப் பாவிக்காதது மாதிரி பேசி நடந்து கொள்ளுகிறார்களே, அது ஏன்!

எங்கள் அனுபவம் அதுதான். அப்பா இது வரை ஆறு வரன்கள் பார்த்திருக்கிறார். அதில் இரண்டு, பெண்ணைப் பார்ப்பதற்கு முன்பே கழன்று போய்விட்டன. மற்ற நான்கு வரன்களும்......

இந்த இடத்தில் எழுதாமலே விட்டுவிட வேண்டுமென்று தோன்றுகிறது. ஆனால் அது எப்படி முடியும்?

முதல் வரனின் பெற்றோர்களுடன் பிள்ளையும் பெண் பார்க்க வந்தார். எல்லாக் குடும்பங்களிலும் நடப்பதுபோல எனக்கும் அலங்காரங்கள் எல்லாம் செய்திருந்தது. வெற்றிலைத் தட்டை எடுத்துக் கொண்டு கூடத்திற்குப் போனேன். என்னையும் மீறி இடக்கையால் என் உதடுகளைச் சேர்த்து மறைத்துக் கொண்டு போனேன்.

என் மாமனாரைக் காட்டி "அவருக்கு நமஸ்காரம் பண்ணு, அம்மா!" என்றார் அப்பா.

கையை எடுத்தேன். எப்படி எனக்கு அவ்வளவு தைரியம் வந்ததென்று எனக்கே தெரியாது. அந்த மனிதரின் கண்களை நேரடியாகக் கவனித்தேன். என் முகத்தைப் பார்த்தவுடன் அந்தக் கண்களில் தோன்றிய அருவருப்பு என்னை ஈட்டியால் குத்துவதுபோலிருந்தது. துடித்துப் போய் விட்டேன்.

பிள்ளைக்கும் நமஸ்காரம் பண்ணச் சொன்னார். அவர் கண்களையும் பார்த்தேன். அப்பா! அதில் நான் கண்ட கசப்பை எப்படி எழுத்தில் எழுதிக் காட்டுவேன்! என் நெஞ்சு குமுறியது. 'அப்பா! இவர்கள் குடும்பத்திற்கு நான் போகவே மாட்டேன்' என்று அங்கேயே வாய் விட்டுக் கதற வேண்டும்போலிருந்தது.

எப்படியோ சமாளித்துக் கொண்டு உள்ளே போய்ச் சேர்ந்தேன்.

அவர்கள் ஏதோ சாக்குப் போக்குச் சொல்லி விட்டுப் போய்விட்டார்கள்.

இரண்டாவது வரனைப் பெண் பார்க்க வந்தவர்களிடமும் நான் அதே அனுபவத்தையே அடைந்தேன்.

அதனால் அதற்குப் பிறகு வந்த இரண்டு கோஷ்டிகள் முன்னாலும் போனபோது என் மூளியை மூட முயலவேயில்லை. தைரியமாக வந்திருந்தவர்கள் கண்களையே கவனித்துக்கொண்டு போனேன். அவர்கள் என் முகத்தைப் பார்த்தவுடன் அவர்கள் கண்களில் தோன்றிய அருவருப்பும், வெறுப்பும் ஒவ்வொரு தடவையும் என்னைச் சவுக்கால் அடிப்பதுபோல இருந்தது.



ஒவ்வொரு தடவையும் ஒரு கோஷ்டி வந்து போன பிறகு தனியாகப் போய் 'கோ'வென்று கதறி அழுவேன். நெஞ்சு வெடித்து விடும்போலிருக்கும். என் உடலும் மனமும் குன்றி ஒடுங்கிப் போகும். நெருப்பில் விழுந்த புழுவாகத் துடிப்பேன்.

நான்காவது வரன் வந்து போன மறு நாள் அப்பாவிடம் "இனி யாரிடமாவது போய்ப் பேசினால் முதலிலேயே என் குறையைப் பற்றிச் சொல்லி விடுங்கள். அதற்கு மேலும் அவர்கள் பெண்ணைப் பார்க்கத்தான் வேண்டுமென்றால் மாத்திரம் வரச் சொல்லுங்கள்" என்றேன்.

அவர் சம்மதித்தார். கடைசியாக என்னைப் பார்க்க ஒரு பிள்ளை வந்து போய் ஒன்றரை வருஷங்களாகி விட்டன. அதன் பின் எத்தனையோ காரணங்களால் என் கலியாண முயற்சி தீவிரமாக நடைபெறவில்லை. அதில் முக்கியமான காரணம் என் தம்பி வெங்கிட்டுவுக்கு வேலை தேடுவதில் அப்பா முனைந்திருந்ததுதான்.

ஒரு வருஷமாயிற்று. அவனுக்கு வேலை கிடைத்தது. ஒரு மில்லில் காஷியருக்கு உதவிப் பதவி. மாமாதான் ரொக்கப் பணம் ஜாமீன் கட்டி அந்த வேலையைப் பிடித்துக் கொடுத்தார். ஒரு வருஷமாக அவன் சம்பாதிக்கும் எண்பது ரூபாயும் சேர்ந்து வீட்டில் கொஞ்சம் பசைப் பிடிப்புடன் வாழ்க்கை நடந்து வருகிறது.

ஒன்றரை வருஷம் ஆறப் போட்டுவிட்டு அப்பா மறுபடி எனக்காகப் பிறந்திருக்கும் மாப்பிள்ளையைத் தேடிக் கண்டு பிடிப்பதில் முனைந்தார். கடைசியாகப் போன மாதம் தஞ்சாவூருக்கு அருகில் ஏதோ கிராமத்திற்குப் போய் ஒரு பிள்ளையைப் பார்த்துப் பேசி விட்டு வந்தார்.

"அந்தப் பிள்ளைக்கு இருபத்தாறு வயதாகிறது. யாரோ மிராசுதார் வீட்டு மணியக்காரர் ஒருவருடைய புதல்வன். படிப்பு கொஞ்சம்தான். ஆனால் அப்பாவுக்கு உதவியாக இருந்து பண்ணை நிர்வாக வேலைகளில் அனுபவம் அடைந்திருக்கிறான். கிடைத்தால் நல்ல இடம்தான்" என்றார்.

பிறகு, "அம்மா! அந்தப் பிள்ளையை முதலெடுப்பில் பார்த்தால் கொஞ்சம் அசடு மாதிரியிருக்கும். வாய் கொஞ்சம் திறந்தபடியே யிருக்கும். அதனால்தான் அப்படித் தோன்றுகிறது. மற்றப்படி கெட்டிக்காரன், யோக்கியன் என்று மிராசுதாரே சொல்லி விட்டார்" என்று என்னைத் தயார் செய்தார் அப்பா.

அந்தப் பிள்ளை தன் தாயாருடன் என்னைப் பார்க்க வரப் போவதாகக் கடிதம் வந்தது. மற்றவர்களெல்லாம் அதிலேயே கலியாணம் நிச்சயமாகி விட்ட மாதிரி ஆர்ப்பாட்டம் செய்தார்கள். ஆனால் எனக்கென்னவோ உற்சாகமேயில்லை. வந்து பார்த்து விட்டுப் போகட்டும் என்று தோன்றியது. அவர்கள் வருவதாக இருந்ததற்கு முதல் நாள் மாலையில் எங்கள் வீட்டில் ஏகப் பரபரப்பு. குடும்பத்தையே அழித்து விடுவதற்கு வந்த ஒரு விபத்து தலைப் பாகையுடன் போய் விட்டதென்று எல்லோரும் தெய்வத்திற்கு நன்றி செலுத்தினோம்.




அன்று மாலையில் வெங்கிட்டு ஆபீஸிலிருந்து வந்ததும் வராததுமாக "அம்மா! இன்று எவ்வளவு பெரிய ஆபத்து வருவதற்கு இருந்தது தெரியுமா! இன்று மில்லில் சம்பளப் பட்டுவாடா. நானும் காஷியரும் காரில் பாங்குக்குப் போய் 'செக்' மாற்றி ரொக்கப் பணத்துடன் வந்து கொண்டிருந்தோம். வழியில் ஒருவன் திடீரென்று நடு ரோட்டில் மோட்டாருக்கு முன்னால் வந்து நின்று நிறுத்தி விட்டான். அது ஒரு சந்து முனை. அந்த முனையில் நாலைந்து தடியர்கள் கள்ளப் பார்வையாகப் பார்த்துக் கொண்டு நிற்பதை நான் பார்த்துவிட்டேன். நான் காரின் முன்புறத்தில் டிரைவருக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்தேன். அவன் திடீரென்று வந்து காரை நிறுத்தினவுடன் நான் 'ஸார் திருடன்!.... கொள்ளைக்காரர்கள்! டிரைவர், நிறுத்தாதே! ஓட்டு, ஓட்டு!' என்று கூவினேன்.

"டிரைவர் பயந்து போய்க் காரை நிறுத்தி விட்டான். அதற்குள் பின்னால் காஷியருடன் உட்கார்ந்திருந்த கூர்க்கா கீழே குதித்து முன்னால் ஓடி வந்து வழி மறித்தவனைப் பிடித்துக் கொண்டான். என் கூச்சலைக் கேட்டு ஜனங்கள் ஓடி வந்தார்கள். சந்து முனையிலிருந்த தடியன்கள் ஒரே ஓட்டமாய் எங்கேயோ ஓடி விட்டார்கள்.

"ஜனங்கள் வழி மறித்தவனை அடித்துக் கொன்றிருப்பார்கள். கூர்க்காவும் டிரைவருமாக அவனை ஒரு துணியால் கட்டிக் காருக்குள்

# அவசரம்!



''என்னப்பா! நான் செடியை நடுவதற்குள்ளேயே வேலியை அவசரப்பட்டு வைத்துவிட்டாயே! நான் எப்படி வெளியே வர முடியும்?''

---

இழுத்துப் போட்டு விட்டார்கள். அவனைக் கொண்டு போய்ப் போலீஸில் ஒப்படைத்து விட்டோம். ஸ்டேஷனில் எங்களிடம் ஸ்டேட்மெண்டு வாங்கிக் கொண்டு அனுப்பி விட்டார்கள். இதற்குள் டெலிபோனில் விஷயம் கேள்விப்பட்டு எங்கள் மில் மானேஜரே அங்கே வந்து விட்டார். என்னால்தான் கொள்ளை தடைப்பட்டுப் பணம் காப்பாற்றப் பட்டதென்று அவருக்கு ரொம்ப சந்தோஷம். அம்மா! காரை மறித்தவன் கம்ம ஜாதிதான்!'' என்று சொன்னான்.

வந்த ஆபத்துப் போய் விட்டதென்று எல்லோரும் ஒருவாறு தெளிந்தோம்.

மறுநாள் காலை ஒன்பதரை மணிக்கு வீட்டு வாசலில் ஒரு ஜட்கா வந்து நின்றது. அதிலிருந்து மாப்பிள்ளையாகப் போகிறவரும் அவர் தாயாரும் இறங்கினார்கள். எங்கள் வீட்டு வாசற்படிக்கு வந்ததும், மாப்பிள்ளை எதிரிலிருந்த வெங்கிட்டுவைப் பார்த்து விட்டு ''இவன்தான் அம்மா, இவன்தான்; என்னைத் திருடன்னு சொல்லிப் போலீஸிலே கொண்டு போய் அடைத்தவன் இவன்தான்!'' என்று கூவினார். என் தந்தை ஒன்றும் புரியாமல் ''இவன் என் பிள்ளை, கலியாணப் பெண்ணுக்குத் தம்பி!'' என்றார்.

மாப்பிள்ளை ''ஓஹோ! அப்போ நான் யாருன்னு தெரிஞ்சேதான் வேணும்னே இப்படி அவமானப்படுத்தி யிருக்கானா! அம்மா! என் உயிர் போனாலும் சரி, அவன் அக்காளை நான் கலியாணம் பண்ணிக்க மாட்டேன். உம், கிளம்பு! புறப்படு, போகலாம்'' என்று ஓடிப் போய் வண்டியில் ஏறிக் கொண்டு விட்டார்.

அந்த அம்மாள் ஒன்றும் புரியாமல் திகைத்து விட்டுப் போய் ஏறிக்கொண்டாள். ஜட்கா புறப்பட்டு விட்டது. அப்பா திகைப்பு நீங்கி ஜட்காவின் பின் ஓடுவதற்குள் அது தெருக் கோடிக்குப் போய் விட்டது. எப்படியோ விழுந்தடித்துக் கொண்டு போய் வண்டியை நிறுத்தி அந்த அம்மாளிடம் பேசினார்.

திரும்பி வரும்போது அவர் முகமே சோர்ந்து போயிருந்தது. வீட்டிற்குள் வந்து தலையில் கை வைத்துக் கொண்டு உட்கார்ந்து விட்டார்.

''ஏன்னா! என்ன நடந்தது! ஏன் இப்படி அசந்து உட்கார்ந்து விட்டேள்!'' என்று அம்மா தூண்டித் தூண்டிக் கேட்ட பிறகு விவரம் சொன்னார்.

மாப்பிள்ளையாகப் போகிறவரும் அவர் தாயாரும் சென்னையில் யாரோ பந்துக்கள் வீட்டில் வந்து இறங்கியிருக்கிறார்கள். அந்த வீட்டில் கார் இருக்கிறது. அதன் பதிவு எண் எம். எஸ். வி. 2203. வெங்கிட்டு பாங்குக்குப் போய் வந்த காரின் எண் எம்.எஸ்.பி.2203 பட்டணத்துப் பழக்க முள்ளவர்களிலேயே சிலருக்குத்தான் இரண்டுக்கும் உள்ள வித்தியாசம் புரியும். மாப்பிள்ளை பட்டணத்திற்குப் புதிது. எங்கேயோ ஊர் சுற்றி வேடிக்கை பார்த்துக் கொண்டே வந்தவர் மில் கார் எண்ணைப் பார்த்தவுடன் அது தங்கள் உறவினருடையதுதான் என்று நினைத்து நிறுத்த முயன்றிருக்கிறார். பணத்தைக் கொண்டு போகிறோம் என்ற கவலையில் வெங்கிட்டு, 'கொள்ளைக்காரன்!' என்று பீதி பிடித்துக் கூவிவிட்டான்.

பின்னால் போலீஸ் ஸ்டேஷனில் மாப்பிள்ளையை மிரட்டிக் கேட்டபோது விஷயம் தெளிவாகியிருக்கிறது. அவருடைய உறவினர் வந்து மீட்டுக் கொண்டு போனார்.

இந்த விஷயங்களைச் சொல்லிவிட்டு அப்பா ''அந்த அம்மாளிடம் 'இது தற்செயலாக நேர்ந்த தவறு. மனதில் வைக்கலாமா! வண்டியைத் திருப்புங்கள்; வாருங்கள்!' என்று கெஞ்சினேன். அவன் ஒரே பிடிவாதமாக 'அந்தப் பயல் அக்காளை நான் கலியாணம் செய்து கொள்ளவே மாட்டேன்' என்று சொல்லிவிட்டுப் போய்விட்டான்'' என்று ஆறாத குறையாகப் பேசினார்.

அவர்களுக்கெல்லாம் கலியாண முயற்சி அப்படித் தடைப்பட்டுத் தவறிப் போனதில் ரொம்ப வருத்தம்.

ஆனால் என் வரையில் மாப்பிள்ளை என்னைப் பார்க்காமலே வேண்டாமென்று போய்விட்டதில் ஒரு திருப்தி. சந்தோஷமும் கூட.

நானும் கதைகள் நாவல்கள் எல்லாம் படித்திருக்கிறேன். எனக்கும் மனம் என்று ஒன்று இருக்கிறது. கண்டதும் காதல் என்கிறார்களே, அதைப்பற்றி நான் நான் கணக்காக யோசித்திருக்கிறேன். என்னைப் பெண் பார்க்க வருகிற பிள்ளையின் கண்களைப் பார்த்தவுடன் அங்கே ஏதோ அதிசயத்தை, ஒரு பெரு மகிழ்ச்சியைக் காண என் மனம் ஆவல் கொண்டு துடிக்கிறது. ஆனால் அங்கே ஒவ்வொரு தடவையும் நான் காண்பது என்ன! என் முகத்தைப் பார்த்தவுடன் அவர்கள் கண்களில் தோன்றும் அருவருப்பையும், வெறுப்பையும் கண்டு மனம் துடிக்கிற துடிப்பும், அடையும் வேதனையும் மற்றவர்களுக்கு எப்படிப் புரியப் போகிறது!

# ஏழை பங்காளன்

குட்டிக் கதை 12



ஒரு சமயம் பூலோகத்தைச் சுற்றிப் பார்த்து விட்டுச் சென்ற நாரத முனிவருக்கு ஒரு சந்தேகம் எழுந்தது. அந்தச் சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்வதற்காக அவர் ஸ்ரீ வைகுண்டத்தை நோக்கிச் சென்றார்.

அங்கே லக்ஷ்மி சமேதராக வீற்றிருந்த ஸ்ரீமந் நாராயணமூர்த்தி நாரதரைக் கண்டதும், "வாரும், நாரத முனிவரே! என்ன விசேஷம்?" என்று விசாரித்தார்.

"சுவாமி, எனக்கு வெகு நாட்களாக ஒரு சந்தேகம்......" என்று ஆரம்பித்தார் நாரதர்.

"திரிலோக சஞ்சாரியான உமக்குக் கூடத் தீராத சந்தேகம் உண்டா, என்ன? — அப்படி என்ன சந்தேகமோ?"

"ஆதியும் அந்தமும் இல்லாத தங்களை இயற்கை உற்பாதங்களான மழையிலிருந்தும் வெய்யிலிலிருந்தும் காப்பதாக நினைத்துக் கொண்டு, பூலோகத்தில் சிலர் தங்களுக்குக் கோயில் கட்டித் தருகிறார்கள் அல்லவா? அதேமாதிரி, வேறு சிலர் இயற்கை உற்பாதங்களுக்கு ஆளாகி நிற்கக்கூட நிழல் இன்றித் தவிக்கும் ஆயிரமாயிரம் அனாதைகளுக்கும் ஆசிரமங்களைப் போன்ற குடிசைகள் கட்டித் தருகிறார்கள்............"

"அதனால் என்ன......?"



"அதனால் என்னவா! தங்களுக்குக் கோயில் கட்டித் தருபவர்களின் பெயர் உலகத்தில் என்றும் நிலைத்து நிற்கிறதாம்; ஏழைகளுக்குக் குடிசைகள் கட்டித் தருபவர்களின் பெயர் அந்தக் குடிசைகளைப் போலவே வெகு சீக்கிரத்தில் மறைந்து விடுகிறதாம். பூலோக வாசிகளுக்கு இப்படி ஒரு நம்பிக்கை இருந்து வருகிறது. இதனால் தாங்கள் ஏழை-பங்காளன் என்பதையே அவர்கள் அடியோடு மறந்து, அனாதைகளுக்குக் குடிசைகள் கட்டிக் கொடுக்கத் தயங்குகிறார்கள். அதைவிடத் தங்களுக்குக் கோயில் கட்டித் தருவது மேல் என்றும் கருதுகிறார்கள். இந்த அக்கிரமத்துக்குத் தாங்களும் உடந்தையாயிருக்கிறீர்கள் என்று அவர்கள் சொல்வதை என்னால் நம்ப முடியவில்லை. இதில்தான் எனக்குச் சந்தேகம், சுவாமி!" என்று சொல்லிவிட்டு, நாரதர் ஸ்ரீமந் நாராயணமூர்த்தியின் சுமாவதனத்தைக் கண் கொட்டாமல் பார்த்தார்.

தமக்கு அருகிலிருந்த லக்ஷ்மிதேவியை ஒருமுறை கடைக் கண்ணால் நோக்கிச் சிரித்துவிட்டு ஸ்ரீமந் நாராயணமூர்த்தி சொன்னார்:

"நாரத முனிவரே! பூலோக வாசிகளைப் போலவே நீரும் இப்படி அஞ்ஞானியாயிருப்பீர் என்று நான் நினைக்கவே இல்லை. இதில் என்ன சந்தேகம் உமக்கு? எவன் ஒருவன் இருக்க இடமின்றித் தவிக்கும் ஏழைகளுக்குக் குடிசைகள் கட்டித் தருகிறானோ, அவன் பூதவுடலை நீத்ததும் என்னை வந்து அடைகிறான்; என்னுள் ஐக்கியமாகியும் விடுகிறான். எல்லாம் வல்ல எனக்காகக் கோயில் கட்டுபவன் என்னை வந்து ஒருநாளும் அடைவதில்லை; என்னுள் ஐக்கியமாவதும் இல்லை. இதனால் ஏழைகளுக்குக் குடிசைகள் கட்டித் தருபவனின் பெயர் மண்ணுலகில் மறைகிறது; விண்ணுலகில் நிலைக்கிறது. எனக்குக் கோயில் கட்டித் தருபவனின் பெயரோ மண்ணுலகில் நிலைக்கிறது; விண்ணுலகில் மறைகிறது — இதுதான் விஷயம். இப்பொழுதாவது உங்கள் சந்தேகம் தீர்ந்ததா?"



"தீர்ந்தது, சுவாமி!" என்றார் நாரதர். — விந்தன்

★ ★ "உலகத்தில் பெண்கள் எங்கே பிறக்க வேண்டும்? எங்கே வளர வேண்டும்?" என்று உங்களுக்குத் தெரியுமா? — தெரியாவிட்டால் தோழர் சங்கரனைக் கேளுங்கள் ........ ★ ★

# மிஸ்டர் அப்பு

கோணல்

## 3. ஒத்திகை நடக்கிறது!

மிஸ்டர் அப்புவின் தங்கை மீனுவுக்கு வயது பதினெட்டு இருக்கும். அவளுக்கு விவாகம் செய்து வைக்க வேண்டிய பொறுப்பு அப்புவிடம் இருந்தது. பண வசதி இல்லாமல் எப்படி ஒரு பெண்ணுக்கு விவாகம் செய்து வைக்க முடியும்? அப்பு தன்னுடைய அகட விகட சாமர்த்தியத்தினால் எப்படியாவது அவளுக்கு ஒரு நல்ல வரனைப் பார்த்துக் கல்யாணம் செய்து வைத்துவிட நினைத்தான். அவன் எப்படியாவது மீனுவுக்குக் கல்யாணம் செய்து வைத்து விடுவான் என்று அவனுடைய தாயாருக்கு நம்பிக்கை உண்டு. சில சமயம் மீனுவின் கல்யாண விஷயமாக அவளுக்குக் கவலை ஏற்பட்டாலும் தன் புத்திரனின் சாமர்த்தியத்தை எண்ணி மன ஆறுதல் அடைவாள்.

மீனு அழகான பெண். குடும்பக் காரியங்களிலும் பேச்சிலும் கெட்டிக்காரி. குறுகுறுப்பான கண் பார்வையும், கலகலப்பான பேச்சும் எவரையும் மயக்காமல் இருக்காது. சுமாராகப் படித்தவளேயானாலும் விசாலமான அறிவு படைத்தவள் போல் அவள் பேசுவாள்.

மீனு தன் சாமர்த்தியத்தினாலேயே தானே ஒரு நல்ல கணவனைத் தேர்ந்தெடுத்துக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டுமென்று நினைத்தாள். அனாவசியமாகத் தன் கல்யாணத்திற்காக அப்பு அதிக சிரமம் எடுத்துக் கொள்ளக் கூடாது என்பது அவள் அபிப்பிராயம். தவிர, தன் தமையனின் படாடோபப் பேச்சும், ஊரை ஏமாற்றும் வித்தையும் அவளுக்குக் கொஞ்சமும் பிடிக்காது. ஊர் முழுவதும் வெறும் படாடோபப் பேச்சினாலேயே அவன் கடன் வாங்கி யிருப்பது அவளுக்கு மனதில் பயத்தையும் நடுக்கத்தையும் அடிக்கடி உண்டாக்குவதுண்டு. அதே சமயத்தில் அவன்மீது அர்த்தமற்ற அனுதாபமும் அவளுக்கு ஏற்படும். அவன் எங்கேயாவது ஒரு இடத்தில் வேலைக்கு அமர்ந்து சொற்ப சம்பளம் கிடைத்தாலும் கண்ணியமாகக் குடித்தனத்தை நடத்த மாட்டானா என்று அடிக்கடி அவள் எண்ணி ஏங்கினாள். அப்புவின் நான்கு வருஷ திட்டத்தைப் பற்றியும், அதன் இருபத்தொன்பது அம்சங்களைப் பற்றியும் அவளுக்கு நன்றாகத் தெரியும். அதைப் பற்றி அப்பு பிறரிடம் அடுக்கடுக்காக வர்ணித்துப் பேசுவதையெல்லாம் அவள் கேட்டிருக்கிறாள். ஆண்டி மடம் கட்டும் கதையாக இந்த ஆகாசக் கோட்டைகளெல்லாம் எவ்வளவு தூரம் கைபெறும் என்பது அவளுக்கே வியப்பாக இருந்தது.

அன்று தாயார் அரிசி இல்லை என்று சொன்னபோது அப்பு அவனுடைய நண்பன் சங்கர் என்பவனிடமிருந்து பத்து ரூபாய் கேட்டு வாங்கிக் கொண்டு வந்தது அவளுக்கு நன்றாய்த் தெரியும். அப்பு புதிதாகப் பிடித்த சிநேகிதன் சங்கரைப் பற்றி அடிக்கடி புகழ்ச்சியாகச் சொல்லிக் கொண்டிருப்பதும் அவளுக்குத் தெரியும். இதுவரையில் அப்பு எவ்வளவோ தடவை சங்கரிடமிருந்து பணம் வாங்கியிருக்கிறான். இப்படிப்பட்ட தயாள குணம் படைத்த உத்தம நண்பன் சங்கரை மீனு பார்த்ததே கிடையாது. ஆனால் தன் சகோதரனுக்குப் பணம் கொடுப்பவர்களை ஒரு அப்பாவியாகவோ அசடாகவோ நினைத்துத்தான் அவள் அனுதாபப்படுவாள். அப்படியேதான் சங்கரனும் ஒரு அசட்டு அப்பாவி வாலிபனாக இருக்க வேண்டுமென்று அவள் முடிவு கட்டியிருந்தாள். இருந்தாலும் அந்த ஆத்மாவை ஒரு நாள் பார்க்க வேண்டுமென்ற ஆவலுடன் இருந்தாள்.

அன்று மத்தியானம் சாப்பிட்டுக் கொண்டிருக்கும்போது அப்பு தன் தாயாரிடம் சில வார்த்தைகள் சொன்னதும் அவள் காதில் விழுந்தது. அப்பு எப்படியாவது முயற்சி செய்து சங்கரன் மீனுவைக் கலியாணம் செய்து கொள்ளும்படி செய்துவிடப் போகிறானாம். இதைக் கேட்டு மீனு திடுக்கிட்டாள். அவளுடைய நெஞ்சில் எவ்வளவோ எண்ணங்கள் எழுந்தன. குழம்பிக் குழம்பிச்



சிந்தனை செய்ய ஆரம்பித்தாள். சங்கரன் பெரிய பணக்கார வீட்டுக் குலக் கொழுந்தாம். சீர்திருத்த நோக்கமும் சமதர்மக் கொள்கையும் நிறைந்தவனும். இவைகளை யெல்லாம் அப்பு சொல்லிய வார்த்தைகளி லிருந்துதான் அவள் தெரிந்துகொண்டாள்.

சங்கரனைப் பார்ப்பதற்கு முன்னால் அவனிடம் வெறுப்போ, ஆசையோ மீனுவுக்கு உண்டாகி விடவில்லை. ஆனால் தன் சகோதரனுக்குச் சிநேகிதனான ஒருவன் புத்திசாலியாக இருப்பான் என்று நிச்சயிப்பது தான் அவளுக்குச் சிரமமாய் இருந்தது. தவிர சங்கரன் ஒரு பணக்கார வீட்டுப் பையன். அவர்கள் வீட்டில் சம்பந்தம் செய்து கொள்ளத் தங்கள் குடும்பத்திற்கு ஏதேனும் யோக்யதை இருக்க வேண்டாமா? அவன் எப்படிப்பட்ட சமதர்ம நோக்க முடையவனாயினும், அன்னையின் கட்டுக்குக் கட்டுப் பட்டவனாயினும், அவனுடைய பெற்றோர்கள் இதற்குச் சம்மதிக்க வேண்டாமா? அவர்கள் வீட்டிற்கு நாட்டுப் பெண்ணாகப் போனால் அவர்கள் தன்னை அலட்சியப்படுத்தாமல் இருக்க வேண்டுமே? – இப்படியெல்லாம் நினைத்து நினைத்துக் குழம்பினாள் மீனு.

ஒரு நாள் சாயந்திரம் சங்கரனை அழைத்துக் கொண்டு வரப்போவதாக அப்பு சொன்னான். அவனுடைய தாயாரின் அபில மனது கேட்கவில்லை. அன்று மீனுவைப் பார்ப்பதற்காகவே சங்கரனை அழைத்து வரப்போவதாகச் சொன்னதும் மீனுவின் தாயார் அவளுக்கு எப்படி எப்படி யெல்லாம் அலங்காரம் செய்யலாம் என்பதில் சிரத்தை செலுத்தலானாள். ஆனால் மிஸ்டர் அப்புவின் வழி வேறாக இருந்தது. அவன் சொன்னதெல்லாம் ஒரு நாடகத்திற்கு முதல் காட்சி ஒத்திகை நடத்துவதுபோல்தான் இருந்தது. மீனு வைத்திருக்கும் தாவணிகளில் எது அதிகமாகக் கிழிந்து அழுக்கடைந்திருக்கிறதோ அதைத்தான் அவள் உடுத்திக் கொள்ள வேண்டும் என்று உத்தரவிட்டான். அவள் அணிந்திருந்த தோடு, மூக்குத் திருகு போன்ற இரண்டொரு சாதாரண ஆபரணங்களையும் கழற்றி வைத்துவிட வேண்டுமாம். அவன் வாசற் பக்கத்து அறையில் சங்கரனோடு உட்கார்ந்து பேசிக்கொண்டிருக்கும்போது அவள் காப்பி கொண்டுவர வேண்டும். காப்பி டம்ளர்களை மேஜைமீது வைத்துவிட்டு அங்கு கணநேரம்கூட நிற்காமல் வெட்கப்படுபவள் போல ஓடிவந்து விட வேண்டுமாம். சிறிது நேரம் கழித்து அப்பு அவளைக் கூப்பிடுவானாம். அப்பொழுது அவள் நன்றாக அலங்காரம் செய்துகொண்டு வந்து எதிரே நிற்கவேண்டுமாம். அப்பு அப்பொழுது அவளை ஒரு பாட்டுப் பாடு என்று சொல்லுவானாம். உடனே அவள் 'பாட்டாளித் தோழரும், பணக்காரக் கூட்டமும் பாரினில் ஒன்றாய் வாழ்ந்திடணும்' என்ற பாட்டைப் பாடவேண்டும் என்று சொல்லி, அந்தப் பாட்டையும் மீனுவுக்குச் சொல்லிக் கொடுத்தான் அப்பு.

இவைகளெல்லாம் மீனுவுக்குத் துளிக் கூடப் பிடிக்கவில்லை. இவ்வளவு ஒத்திகையும், நடிப்பும், ஏமாற்று வித்தையும் செய்து ஒருவரைக் கலியாணம் செய்து கொள்ள விரும்பவில்லை மீனு. ஆனால் சகோதரனின் பிடிவாதத்திற்கும் தாயாரின் நச்சரிப்புக்கும் அவள் கட்டுப்பட வேண்டியிருந்தது. உள்ளந்தரங்கத்தில் பிடிக்காவிட்டால் தன் தாயாரின் வார்த்தைக்கோ சகோதரனின் ஆக்ஞைக்கோ அவள் கட்டுப்படுவதா யில்லை.

அன்று மாலை அப்பு சங்கரனை அழைத்துக் கொண்டு வந்தான். அவனை வாசற் பக்கத்து அறையில் உட்கார வைத்துவிட்டு உள்ளே வந்து, "மீனு, தயாராய் இருக்கிறாயா?" என்றான்.

மீனு தயாராய் இருக்கிறேன் என்பது போல் தலையை ஆட்டினாள். அவன் சொல்லியபடி அழுக்கடைந்த கந்தல் புடவையைத் தான் அவள் உடுத்தியிருந்தாள். அவளுக்கு இருக்கிற இரண்டொரு ஆபரணங்களை அணிந்துகொள்ளாதிருந்தும் அவள் அழகு

குறையவில்லை. அப்பு அவளைத் தலையிலிருந்து கால் வரையில் ஒரு தடவை பார்த்து விட்டு, "சரி! இதுதான்சரி! இப்படித்தான் இருக்கவேண்டும். ஹூம்! சீக்கிரம் காப்பி தயாரானதும் எடுத்துக் கொண்டு வா!" என்று சொல்லிவிட்டு வெளியே போனான்.

"மன்னித்துக் கொள். உன்னைச் சிறிது நேரம் உட்கார வைத்து விட்டேன்!" என்று சொல்லிக் கொண்டே உள்ளே நுழைந்தான் அப்பு.

அந்த அறையில் கிடந்த பழைய நாற்காலி ஒன்றில் ஏதோ ஒரு புத்தகத்தை எடுத்துப் புரட்டிக்கொண்டு உட்கார்ந்திருந்த சங்கரன், "அதனால் பாதகமில்லை. அதிருக்கட்டும், உலகப் பிரமுகர் 'பிடால்கி' எழுதிய 'உலக மக்களும் உருளைக் கிழங்கும்' என்ற இந்தப் புஸ்தகம் உனக்கு ஏது?" என்றான் ஆவலுடன்.

"ஓ! அதுவா? இதெல்லாம் என் தங்கைக்கு ஒரு பைத்தியம்" என்றான் அலட்சியமாக அப்பு.

"உன் தங்கையா? உனக்கு ஒரு தங்கை இருப்பதாக நீ என்னிடம் சொன்னதே இல்லையே!" என்றான் ஆச்சரியத்துடன் சங்கரன்.

"நான் சொன்னதே இல்லையா? இருக்காது. எனக்கு இதெல்லாம் சொல்ல வேண்டிய விஷயங்களாகவே சில சமயம் படுவதில்லை. என் கவலையெல்லாம் என்னுடைய நான்கு வருஷத் திட்டத்திலேதான். நான் குடும்பத்தைக் கூடச் சரியாகக் கவனிப்பதே இல்லை" என்றான் அப்பு அலட்சியமாக.

இந்தச் சமயத்தில் மின்னல் பளிச்சிடுவதுபோல் மீனு கையில் இரண்டு டம்ளர் காப்பியுடன் அந்த அறையில் நுழைந்து, அவைகளை மேஜை மீது வைத்து விட்டு, வெட்கத்தால் ஓடி மறைந்தாள். இமை மூடித் திறக்குமுன்னுல் இப்படி ஒரு ஜோதி தோன்றி மறையுமென்று சங்கரன் நினைக்கவே இல்லை. அவன் பிரமிப்படைந்து உட்கார்ந்து விட்டான். அப்பு சங்கரனின் முகத்தைப் பார்த்த வண்ணம் "என்ன சங்கர், கொஞ்சம் காப்பி சாப்பிடு!" என்று சொல்லிக்கொண்டே, மேஜை மீது இருந்த டம்ளரில் ஒன்றை எடுத்து அவனிடம் நீட்டினான்.

சங்கரன் அதை வாங்கிக் கொண்டே "அது சரி, மிஸ்டர் அப்பு! இப்பொழுது வந்தது ...!" என்று இழுத்தான்.

"ஆமாம், ஆமாம்! இப்பொழுது வந்தாள், பாரு! அவள்தான் என் தங்கை மீனு!" என்றான் அப்பு.

சங்கரன் ஒரு வாய் காப்பியைக் குடித்து விட்டு ஆழ்ந்த யோசனையிலிருந்தான்.

"என்ன யோசனை, சங்கர்? காப்பியில் சர்க்கரை போதவில்லையா?"

"அதெல்லாம் சரியாய்த்தானிருக்கிறது. மிஸ்டர் அப்பு, உலகத்தில் பெண்கள் பிறக்க வேண்டுமென்றால் அமெரிக்காவில் பிறந்து ஹாலிவுட்டில் வளர வேண்டும். இந்தத் தேசத்தில்—அதுவும் இப்படிப்பட்ட சமூகத்தில் பிறந்து வளர்ந்து—ஆஹா!" என்று சொல்லி ஒரு பெருமூச்சு விட்டு விட்டு மறுபடியும் ஒரு வாய் காப்பியை விஷமாக எண்ணி விழுங்கினான் சங்கரன்.

"எனக்கு அதைப்பற்றியெல்லாம் யோசிக்கவே சந்தர்ப்பம் இல்லை, சங்கர்! அப்படி எப்பொழுதாவது யோசித்தால் என் மூளையே வெடித்துவிடும் போலிருக்கிறது. என் தங்கை மீனு ஒரு சாதாரணமான பெண்ணல்ல. பெண்களின் வாழ்க்கையி



லேயே ஒரு பிரமாதமான புரட்சியை ஏற்படுத்த வேண்டுமென்றால் அது எங்கள் மீனாவால்தான் முடியும். அவளோடு பழகியவர்களுக்குத்தான் தெரியும் அவள் புத்திசாலித்தனம். அதிகமாக நான் என் தங்கையைப் பற்றிப் புகழ்கிறேன் என்று நினைத்துக் கொண்டு விடாதே! குப்பையிலே மாணிக்கம் போல, சிப்பியிலே முத்துப் போல அவள் இந்தக் குடும்பத்தில் வந்து பிறந்து விட்டாள். அவளுக்குக் கல்யாணம் செய்யவேண்டுமே என்று நினைத்தால் எனக்கும் என் தாயாருக்கும் பைத்தியமே பிடித்து விடுகிறது" என்றான் அப்பு.

"ஏன் பைத்தியம் பிடிக்க வேண்டும்? கல்யாணம் செய்து விட்டால் போகிறது..."

"கல்யாணம் செய்து விட்டால் போகிறது என்று சுலபமாகச் சொல்லி விட்டால் போதுமா? இந்த உலகத்தில் வரதட்சிணைக் கொடுமை ஒன்று இருக்கும் வரையில்...?"

"வரதட்சிணையா! இந்த மூடப் பழக்கத்தை ஒழிக்கத்தானே நாம் இருக்கிறோம்?" என்றான் ஆவேசத்துடன் சங்கரன்.

"அதனால்தான் யோசிக்கிறேன். இல்லாவிட்டால் பாங்கில் கிடக்கும் பணத்தில் நாலாயிரம், ஐயாயிரம் எடுத்து இத்தினை நாள் அவளுக்கு நான் கல்யாணம் செய்திருக்க மாட்டேனா? யாராவது அவளைக் கல்யாணம் செய்துகொள்ள வேண்டு மென்று விரும்பினால் அவன் எனக்கு ஐயாயிரம் ரூபாய் கொடுத்து விட்டுக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும் என்கிறாள் மீனா. அதோடு மட்டுமல்ல; அவள் யாரையாவது காதலித்துத்தான் கல்யாணம் செய்து கொள்ளப் போவதாகச் சொல்லுகிறாள்" என்று சொல்லிவிட்டு, டம்ளரில் இருந்த பாக்கிக் காப்பியையும் சாப்பிட்டான் அப்பு.

"அதுதான் சரி. காதலில்லாத கல்யாணம் கடுகு தாளிக்காத ரசம் போல! காதலித்துத்தான் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும். அதிருக்கட்டும், அவள் இது வரையில் யாரையாவது......"

"இதுவரையில் அவள் ஒருவரையும் காதலித்ததாகத் தெரியவில்லை. இனிமேல் எப்படியோ!"

"அப்படியா?—ரொம்ப சரி! மிஸ்டர் அப்பு, ஒரு விஷயத்தில் நீ ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். மீனாவை யார் காதலிக்கிறானோ அந்த வரன் ஐயாயிரம் ரூபாய் அவளுக்குக் கொடுக்கும் சக்தி உள்ளவன்தானா என்பதைக் கவனித்து விட்டுத்தான் மீனாவின் கல்யாணத்தைப் பற்றி யோசிக்க வேண்டும்!" என்றான் சங்கரன்.

"அப்படித்தான் என்னுடைய அபிப்பிராயமும்!" என்றான் அப்பு.

"ஐயாயிரம் ரூபாய் கிடக்கிறது! மீனாவைக் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறவன் மிகுந்த அதிர்ஷ்டசாலியாக இருக்க வேண்டும்."

"ஆமாம், அதிலென்ன சந்தேகம்? ஆனால் அப்படிப்பட்ட அதிர்ஷ்டசாலியைக் கண்டுபிடிப்பதுதான் கஷ்டமாயிருக்கிறது. அவளுடைய புத்திசாலித்தனத்திற்கும் குணத்திற்கும் ஏற்றாற்போல் ஒருவன் அமையவேண்டாமா?"

"அதிலென்ன சந்தேகம்? அப்படிப்பட்டவனாகத்தான் பார்த்துப் பிடிக்கவேண்டும். அவன் புத்திசாலியாக இருந்தாலும் இல்லாவிட்டாலும் சமதர்ம நோக்கமும் புரட்சிகரமான கொள்கையும் உடையவனாக இருக்க வேண்டும்" என்றான் சங்கரன்.

"மீனாவுக்குச் சில சில்லறை ஆசைகளெல்லாம் இருக்கிறது. அதெல்லாம் சகஜமாகப் பெண்களுக்கு இருக்கக் கூடியது......" என்றான் அப்பு.

"அது என்ன ஆசை......?"

"அவளுக்கு ஏ ரா ள மா க நகைகள் அணிந்து கொள்ள வேண்டுமென்ற ஆசை ஒரு நாளும் இருந்ததில்லை. இருந்தாலும் கழுத்திற்கு ஒரு பொன் சங்கிலியும் கைக்கு ஒரு ஜோடி பொன் வளையும் இல்லையே என்று ஒரு குறை. இந்தக் குறையைத் தீர்ப்பது எனக்கொன்றும் பிரமாதமில்லை. முக்கியமாக என்னுடைய நான்கு வருஷத் திட்டத்திற்காக பாங்கியிலிருக்கும் பணத்தை எடுத்துக் குடும்பத்திற்காகவும், நகைக்காகவும் செலவு செய்ய இஷ்டமில்லை......"

"அடுத்த வீட்டில் லட்டு சாப்பிட்டால் நாமும் சாப்பிட வேண்டுமென்று நினைப்பதில் என்ன தவறு, மிஸ்டர் அப்பு? ஒவ்வொரு வீட்டிலும் ஒவ்வொருவரும் லட்டு சாப்பிட வேண்டும். அடுத்த வீட்டில் லட்டு நெய்யிலும் சர்க்கரையிலும் செய்திருந்தால் நம் வீட்டிலும் அது நெய்யிலும் சர்க்கரையிலும் செய்தாக வேண்டும். ஒவ்வொருவருக்கும் லட்டு சாப்பிட உரிமையுண்டு. இதுதான் சமதர்ம நோக்கத்தின் அடிப்படைக் கொள்கை. ஒவ்வொரு பெண்ணுக்கும் நகை அணிந்து கொள்ள எவ்வளவு ஆசை உண்டோ, அவ்வளவு உரிமையும் உண்டு. இந்த அடிப்படையில்

முதன் முதல் உன் தங்கைக்கு வேண்டிய நகைகளை வாங்கிக் கொடுப்பது நம் கடமை" என்றான் சங்கரன் ஆவேசமாக.

"நான் அதைக் கடமை என்று உணர்கிறேன், சங்கர்! ஆனால் பவுன் விலை எழுபத்தைந்து ரூபாய்க்கு மேல் விற்கிறதே!"

"ஒரு பவுன் இருநூற்று ஐம்பது ரூபாய் வீதம் விற்றாலும் நாம் கடமையைச் செய்தாக வேண்டும். பணத்தைப் பற்றிய கவலை உனக்குத் துளிக்கூட வேண்டாம்......"

"நீ தைரியம் சொல்லும்போது எனக்கு என்ன கவலை? அதிருக்கட்டும், சங்கீதம் என்றாலே உனக்குக் கேட்கப் பிடிக்காதே, ஆனால் மீனாவின் பாட்டை நீ கேட்டுவிட்டால் உண்மையான சங்கீதத்தின் உயிர்நாடி எங்கே இருக்கிறது என்று உனக்குத் தெரியும்."

"ஓ! அப்படியா? அப்படியென்றால் ஒரு பாட்டுக் கேட்க வேண்டுமே!"

"தாராளமாய்க் கேட்கலாம். இதோ அவளைக் கூப்பிட்டுப் பாடச் சொல்லுகிறேன்" என்று சொல்லிவிட்டு, "மீனா, இங்கே வா, அம்மா!" என்று கூப்பிட்டான்.

"இதோ வந்து விட்டேன், அண்ணா!" என்று கணீரென்று குரல் கொடுத்த வண்ணம் அந்த அறையில் நுழைந்தாள் மீனா. முதலில் வந்த பெண்தானா இவள் என்று சந்தேகிக்கும்படி இருந்தது அவளுடைய அலங்காரம்.

அப்பு கனைத்துக் கொண்டே, "மீனா! அப்படியே உட்கார்ந்து நல்ல பாட்டாக ஒன்று பாடு... அடடே! மறந்து விட்டேனே, இவர் யார் தெரியுமா உனக்கு?" என்றான்.

மீனா தன் மிரண்ட விழிப் பார்வையை ஒரு தடவை சங்கரன்மீது வீசிவிட்டு வெட்கத்தால் தலை குனிந்த வண்ணம் "நீ சொன்னால்தானே தெரியும், அண்ணா!" என்றாள் கிளி கொஞ்சுவதுபோல.

"ஆமாம், இவர் யார், தெரியுமா? காம்ரேட் சங்கரன். இவரில்லாமல் இந்த ஊரில் ஒரு பொதுக் காரியமும் நடக்காது. இவர் பேசாமல் எந்தப் பொதுக் கூட்டமும் சோபிக்காது. என்னுடைய நான்கு வருஷ திட்டத்தையும் அதன் இருபத்தொன்பது அம்சங்களையும் சரியாகத் தெரிந்துகொண்ட ஒரே ஒரு புத்திசாலி இந்த ஊரில் இவர்தான். இவர் மூன்று லெனினுக்கும், ஆறு நெப்போலியனுக்கும் சமமானவர்......"

"அப்படியா?—ரொம்ப சந்தோஷம். இப்படி ஒல்லியாய் இருக்கிறாரே?" என்றாள் மீனா இனிமையான குரலில்.

"ஒல்லியாய் இருந்தாலென்ன? ஒரு மனிதனின் மேதை முழுவதும் அவனுடைய




"ஜீவ ரக்ஷக சங்கத்தில் வேலை செய்து கொண்டு இப்படி ஆட்டைப் போட்டு அடிக்கிறாயே, அப்பா!"

"அதனால் பாதகமில்லை; நான்தான் இப்பொழுது இரண்டு மாத லீவில் இருக்கிறேனே!"

---

முகத்திலும் கண்களிலும்தான் இருக்கிறது என்று பிரபல ஆங்கிலக் கவிஞரான...... பெயர் மறந்து விட்டதே......!"

"அப்படிச் சொன்னவர் 'டிரிக்மஸன்' அண்ணா!" என்றாள் மீனா.

"ஆமாம், டிரிக்மஸன்தான்! எனக்கு மறந்து போய்விட்டது. பார்த்தாயா, உனக்குப் புத்தகம் படிப்பதிலேயே கவலை இருப்பதால் இவைகளெல்லாம் ஞாபகத்திலிருக்கிறது. போகட்டும், அப்படி உட்கார்ந்து ஒரு பாட்டுப் பாடு!" என்றான் அப்பு.

மீனா அடக்கத்துடன் மண்டியிட்டுத் தரையில் உட்கார்ந்து, அன்று மத்தியானம் புதிதாக அப்பு சொல்லிக் கொடுத்த 'பாட்டாளித் தோழரும் பணக்காரக் கூட்டமும் பாரினில் ஒன்றாய் வாழ்ந்திடணும்' என்ற பாட்டை ஒருவிதமாகப் பாடி முடித்தாள்.

"மிஸ்டர் அப்பு! பாட்டென்றால் இப்படித்தானிருக்க வேண்டும். இப்பொழுது தான் சங்கீதத்திற்கு இன்னும் உயிர் இருக்கிறது என்ற நம்பிக்கை எனக்கு ஏற்பட்டது. இதுதான் பாட்டு! இதுதான் சங்கீதம்!" என்று சொல்லிக் கொண்டே சங்கரன் மீனாவைப் பார்ப்பதற்காகத் திரும்பினான்.

மீனா ஏன் அங்கு நிற்கிறாள்? அவள் உள்ளே போய் இவ்வளவு நேரம் அடக்கி வைத்திருந்த சிரிப்பை யெல்லாம் வாய் விட்டுச் சிரித்துத் தீர்த்தாள். (தொடரும்)

# அகில உலகச் சிறுகதைப் போட்டி

★ ★ ★

- இருபத்தோரு தேசங்களைச் சேர்ந்த பிரசித்தமான பத்திரிகைகள் ஒத்துழைத்து அகில உலகச் சிறு கதைப் போட்டி ஒன்று நடத்துகிறார்கள்.
- இந்த முயற்சியை ஆரம்பித்த பத்திரிகை நியூயார்க் ஹெரால்டு டிரிப்யூன்.
- இந்தியா தேசத்தில் மேற்படி சிறு கதைப் போட்டியை நடத்தும் பொறுப்பைப் புது டெல்லி "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" பத்திரிகை ஏற்றுக் கொண்டிருக்கிறது.
- இந்தியாவின் முக்கியமான பதினொரு பாஷைகளிலாவது ஆங்கிலத்திலாவது மேற்படி போட்டிக்குச் சிறுகதை எழுதலாம்.
- இந்தியாவின் முக்கிய பாஷைகளில் தமிழ் மொழி ஒன்று என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. ஆகையால் தமிழ் எழுத்தாளர்கள் இந்த அகில உலகச் சிறு கதைப் போட்டியில் கலந்துகொள்ளலாம்.
- இந்தியா தேசத்தில் எழுதப்படும் கதைகளில் சிறந்த எட்டு கதைகளுக்கு "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" பத்திரிகை மொத்தம் ரூ. 5,250 பரிசு அளிக்கிறது. இதில் முதல் பரிசு ரூ. 1,500.
- அகில உலகச் சிறுகதைப் போட்டிக்கு ஒவ்வொரு நாட்டிலிருந்தும் இரண்டு அல்லது மூன்று கதைகள் பொறுக்கி அனுப்பப்படும். இப்படி மொத்தம் சேரும் 52 கதைகளில் எல்லாவற்றிலும் சிறந்த கதைக்கு "நியூயார்க் ஹெரால்டு டிரிப்யூன்" பத்திரிகை ஐயாயிரம் டாலர் (ரூ. 22,250) பரிசு அளிக்கும்.
- மேற்படி அகில உலகச் சிறு கதைப் போட்டிக்குத் தமிழ் நாட்டிலிருந்து கதைகளைச் சேகரிக்கும் பொறுப்பைக் "கல்கி" பத்திரிகை ஏற்றுக் கொண்டிருக்கிறது.
- சிறு கதைகள் சுமார் மூவாயிரம் வார்த்தைகள் அடங்கியதாக இருப்பது நலம். நாலாயிரம் வார்த்தைகளுக்கு மேலே போகக் கூடாது.
- 1950-ம் வருஷம் செப்டம்பர் மாதம் 30-ந் தேதிக்குள் மேற்படி சிறுகதைப் போட்டிக்குக் கதைகள் அனுப்பப்பட வேண்டும்.
- போட்டிக்கு அனுப்பும் கதைகள் சொந்தக் கற்பனையென்று கதை ஆசிரியரின் உறுதி மொழி சேர்க்கப்படவேண்டும்.
- கதையின் விஷயம் எதைப்பற்றி வேண்டுமானாலும் இருக்கலாம். காதல், குரோதம், நன்றி, வஞ்சனை, தேசபக்தி, தியாகம், லோபம், துரோகம், கலியாணம், மரணம்,— ஆகிய எந்த விஷயமானாலும் சரி; உணர்ச்சிப்பெருக்கு, அமைப்புத்திறன், வாழ்க்கைப் பண்பு, நடையின் சிறப்பு, கதையின் ஓட்டம், — ஆகிய சிறுகதையின் அம்சங்களே முக்கியமாகக் கருதப்படும்.
- ஒரே ஆசிரியர் போட்டிக்கு இரண்டு கதைகள் அனுப்பலாம்.
- தமிழ்க் கதைகளை அனுப்ப வேண்டிய விலாசம்:—ஆசிரியர், "கல்கி", கீழ்ப்பாக்கம், சென்னை.
- தயவு செய்து உறையின் மேல் "**அகில உலகச் சிறுகதைப் போட்டி**" என்று குறிப்பிட வேண்டுகிறோம்.
- பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுப்பதற்கு "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" ஆசிரியர் ஸ்ரீ தேவதாஸ் காந்தி தகுந்த நீதிபதிகளை நியமனம் செய்வார்.
- மேற்படி போட்டிக்காக வரும் தமிழ்க் கதைகளை ஸ்ரீ தேவதாஸ் காந்தி நியமிக்கும் நீதிபதிகள் பரிசீலனை செய்து அவற்றின் சிறந்த நாலு கதைகளைத் தேர்ந்தெடுத்து மத்திய பரிசீலனைக் கமிட்டிக்கு அனுப்பி வைப்பார்கள். இந்த நாலு கதைகளுக்கும் "கல்கி" நிர்வாகிகள் ஒவ்வொன்றுக்கு ரூ. 250 வீதம் பரிசு அளிப்பார்கள்.
- அகில இந்தியப் போட்டிக்காகப் பஞ்சாயத்தார் தேர்ந்தெடுக்கும் நாலு கதைகளையும் அவற்றின் ஆசிரியர்கள் தாங்களேயோ, பிறரைக் கொண்டோ ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துத் தரவேண்டும்.
- பரிசுக்காகத் தேர்ந்தெடுக்கப்படும் கதைகளைத் தவிர மற்றக் கதைகளில் பிரசுரிப்பதற்குத் தகுதியான கதைகள் "கல்கி"யில் பிரசுரிக்கப்படும். அப்படிப் பிரசுரிக்கப்படும் ஒவ்வொரு கதைக்கும் ரூ. 50 வீதம் சன்மானம் அளிக்கப்படும்.
- பரிசு பெறாத, பிரசுரிக்கப்படாத கதைகளைத் திரும்பப்பெற விரும்புவோர் கையெழுத்துப் பிரதியுடன் போதிய தபால் தலைகள் அனுப்பவேண்டும். திருப்பி அனுப்புவதாக உத்தரவாதம் செய்ய முடியாது.
- இந்தப் போட்டி சம்பந்தமாக ஏற்படும் சந்தேகங்களில் "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" ஆசிரியர் ஸ்ரீ தேவதாஸ் காந்தி கூறும் தீர்ப்பே முடிவானது.

# மறதியோ மறதி!

எஸ். வி. எஸ்.

அன்றைக்கு மாம்பலம் ஸ்டேஷனில் பீச்சுக்குப் போகும் வண்டிக்காகக் காத்துக் கொண்டிருந்தேன். ஏழு நிமிஷத்துக்கு ஒரு வண்டி வருகிறதாயினும், நாம் காத்திருக்கும் ஐந்து நிமிஷமோ நாலு நிமிஷமோ பொறுக்க முடியாத அளவுக்கு எப்படியோ நீண்டு விடுகிறது. ஒவ்வொரு நிமிஷமும் உள்ளத்தில் ஒரு பெரிய பாறாங்கல் அழுத்துவதுபோல் அழுத்துகிறது. வண்டி வருவதற்குள் நாம் படும்பாடு சொல்லி முடியாது.

இந்த நம் கஷ்டத்தை உணர்ந்துதானோ என்னவோ பீடி கம்பெனிக்காரர்களும் சினிமாக்காரர்களும் மட்டரகமான வர்ண விளம்பரங்களை ஸ்டேஷன் சுவர்களில் ஒட்டி, நம்மைப் படிக்க வைத்து, இன்னும் அதிகமாக கஷ்டப் படுத்துகிறார்கள். ரயில் வருவதற்குள்ள ஒரு சில நிமிஷங்களை யுகம் யுகமாகத் தோன்றச் செய்து விடுகிறார்கள்.

இவ்விதம் அன்றைக்கு ஒரு புது விளம்பரம் பார்த்துக்கொண்டிருந்தபோது, "என்னடா பார்க்கிறாய்?" என்று இடிச் சத்தம் போன்ற குரல் காதில் விழுந்தது. அடுத்த கணம் 'கும்' என்று இடியை யொத்த குத்தும் முதுகில் விழுந்தது. "அப்பாடா!" என்று முதுகை நெளித்துக்கொண்டு திரும்பிப் பார்த்தேன். யார் என்று நினைக்கிறீர்கள்? சாக்ஷாத் சாம்புவேதான்!

சாம்பு "என்னடா வைத்த கண் வாங்காமல், அங்கே அப்படி என்ன பார்வை? அப்படி என்ன சுவாரஸ்யமான விளம்பரம்?" என்று கேட்டான்.

ரயில்வே விளம்பரம் ஒன்று புதிதாக அன்று ஒட்டப் பட்டிருந்தது. அதைத்தான் அப்படி உன்னிப்பாகப் படித்துக் கொண்டிருந்தேன். ரயில்வேக்காரர்கள் வருகிற சனிக்கிழமை யன்று சில சாமான்கள் ஏலம் போடப் போகிறார்கள் என்றும், அந்தச் சாமான்களின் ஜாபிதாவும் கொடுக்கப் பட்டிருந்தது. கிராமபோன் பெட்டிகள் 20, டிரங்குப் பெட்டிகள் 300, தவலைகள், குண்டான்கள் — இப்படி எத்தனையோ கொடுக்கப் பட்டிருந்தன..

இவற்றைப் படித்துக் கொண்டு வந்த போதே, இந்தச் சாமான்கள் எல்லாம் ரயில்வேக்காரர்களுக்கு எப்படிக் கிடைத்தன என்பதைப்பற்றி என்னை யறியாமல் என் மனம் சிந்திக்கத் தலைப்பட்டது.

எத்தனையோ பேர் பிரதி தினம் நண்பர்களுக்கு, உறவினர்களுக்கு, அல்லது வியாபார நிமித்தம் வகைவகையான சாமான்கள் பார்சல் செய்து அனுப்புகிறார்கள். அத்தனை பார்சல்களும் பெற வேண்டியவர்கள் ஒழுங்காகப் பெற்றுக் கொள்கிறார்களா, என்ன? கிடையாது. எத்தனையோ பேருக்குத் தங்களுக்கு ஏதோ சாமான் வந்து ரயிலடியில் கிடக்கிறது என்பதுகூடத் தெரியாமல் இருந்து விடுகிறது. அப்படிப்பட்ட சாமான்கள் எத்தனை இதில் சேர்ந்திருக்கின்றனவோ! எத்தனை பேர் தங்களுக்கு வந்துள்ள சாமான்களின் பார்சல் கட்டணம் செலுத்திப் பெற முடியாமல் விட்டிருக்கின்றனரோ! பாவம்! அவர்களுடைய சாமான்கள் எல்லாம். அல்லவோ வருகிற சனிக்கிழமை ஏலம் போடப் போகிறார்கள்! இதுமட்டுமா? ரயிலில் மூட்டையும் முடிச்சுமாகப் பிரயாணம் செய்யும் எத்தனைப் பிரயாணிகள் தங்கள் சாமான்களை அத்தனையும் இறக்க மறந்து தவற விட்டிருக்கின்றனரோ, பாவம்! தெய்வம் மனுஷனையும் படைத்து அந்த மனுஷனில் மறதியையும் வைத்துத் தொலைத்தான்! இந்த மறதியினால் எவ்வளவு கஷ்டங்கள் ஏற்பட்டுத் தொலைகின்றன. மெல்லவும் முடியாமல் விழுங்கவும் முடியாமல் தர்ம சங்கடமான சந்தர்ப்பங்கள் ஏற்பட்டு மனுஷன் தண்ணீராய் உருகிவிட நேருகிறது! கொடிது! கொடிது! இந்த மறதி ரொம்பவும் கொடிது!......

ஆஹா! மறதியின்மேல் நம் ஆத்திரத்தை யெல்லாம் கொட்டிப் பாடப்பட்ட பாடல் ஒன்றும் இல்லையென்றாலும் மறதியை வைத்து எவ்வளவு நல்ல இலக்கியங்கள் சிருஷ்டிக்கப் பட்டிருக்கின்றன. சாகுந்தல நாடகம் இல்லையோ? மறதியை அடிப்படையாக வைத்துத்தானே கதையே! மறதி இல்லையென்றால் சாகுந்தலம்தான் ஏது? காளிதாஸன்தான் ஏது? ஜெர்மன் கவி கேதே முதற்கொண்டு, நேற்றுத் தோன்றிய கற்றுக் குட்டி கவிஞர் யாவரும் காளிதாஸனைப் புகழ்வதற்குக் காரணம் சாகுந்தலம்தான். ஏன், மறதி என்றுகூடச் சொல்லலாம். ஆகவே 'வாழ்க மறதி!' என்று வாழ்த்துக் கூறக் கூடத் தோன்றுகிறதல்லவா?

சாகுந்தலம் பெரிய காவியம், படிப்பது சிரமம், வேண்டாம். ஆனால் ஆட்டைத்

தோளின்மீது போட்டுக் கொண்டு 'ஆடு எங்கே? என் ஆட்டைப் பார்த்தீர்களா?' என்று கேட்டானும்மே ஒரு பிரகஸ்பதி. அந்தக் கதையை இப்பொழுது ஒரு நாம் நினைத்துப் பார்த்துக் கொண்டாலும் நமக்குக் 'குப்'பென்று சிரிப்பு வருகிறது. அதற்குக் காரணம் அந்தப் பிரகஸ்பதியை விட நமக்கு ஞாபகசக்தி அதிகமாக இருக்கிறது என்பதனால் அல்ல. அந்தப் பிரகஸ்பதிக்கு மூத்தண்ணாவாக நாம் இருக்கிறோம் என்பதுதான்! அவனுக்கு இருக்கும் மறதியை விட ஒரு அவுன்ஸ் அதிகமாகவே மறதியைக் கடவுள் நமக்கு வைத்து விட்டதால் தான். அந்தக் கதையை நம்மால் ரசிக்க முடிகிறது; சிரிக்க முடிகிறது. அதாவது நம்மைப் பார்த்து நாமே சிரிக்க முடிகிறது என்று அர்த்தம். இந்த அற்புத நிலைக்குக் கொண்டு செல்வது மறதி. அந்த மறதிக்கு ஒரு வாழ்த்து! அந்த மறதியை நமக்குக் கொடுத்த ஈசனுக்கு ஒரு வாழ்த்து!



இவ்விதம் தத்துப்பித்தென்று ஏதேதோ சிந்தனைகளில் மனசு சென்று கொண்டிருந்த போதுதான் ஆரம்பத்தில் கூறிய இடி முழக்கமும், இடியும் என் காதிலும் முதுகிலும் முறையே விழுந்தன.

★

"ஏண்டா பழி! எருமை மாடு கணக்கா மேலே வந்து விழுகிறாய்?" என்று சாம்புவைக் கோபித்துக் கொண்டேன்.

"பின்னே என்ன? உன்னைப் பார்த்தால் ஏதோ கோட்டையைப் பறி கொடுத்தவன் போல அந்த விளம்பரத்தை பார்த்துக் கொண்டிருக்கிறாயே. உன்னைச் சுயப் பிரக்ஞைக்குக் கொண்டு வருவதற்கு வேறு வழி இடையாதே!" என்றான் சாம்பு.

"லக்ஷணம்தான் போ!... இந்த விளம்பரத்தைப் பார்த்துக் கொண்டிருந்த போது, எத்தனை பேர் மறதியால் தவறவிட்ட சாமான்கள் லைத்துக்கு வருகின்றனவோ என்று ஒரு கணம் நினைத்துப் பார்த்தேன். அடுத்த கணம் மறதியைப் பற்றிய குணநலன்களை என் மனசு நினைக்க ஆரம்பித்து விட்டது!" என்றேன்.

"அழகுதான் போ! ஒன்று கிடக்க இன்னொன்றை நினைக்கப் போய்த்தான் இத்தனை பேரும் சாமான்களைத் தவறவிட்டிருக்கிறார்கள். மறதி என்பது ஒரு தனிக் குணம் அல்ல. ரயிலடிக்கு வந்தால், ரயிலைப் பற்றி, பிளாட்பாரத்தைப் பற்றி என்னு! கும்பலில் ரயில் ஏறும் போது கையிலுள்ள பையைத் தவற விடாமல் எப்படி ஏறுவோம் என்று யோசி. கும்பலே வலது கையால் கெட்டித் தள்ளிக் கொண்டு ஏறலாமா, இடது கையால் கெட்டித் தள்ளிக் கொண்டு ஏறலாமா, அல்லது இந்த இரண்டு வழியும் வேண்டாம் கும்பலிடையில் அகப்பட்டுக் கொண்டு, 'நம் செயலாவது ஒன்றில்லை' என்று இருந்து விட்டால், கும்பலே புஷ்பக விமானத்தில் ஏற்றிச் செல்லுவது போல் ரயிலுக்குள் நம்மை ஏற்றி விடுவார்கள் என்று நிம்மதியாக இருப்பது நல்லதா?—இவை விஷயங்களைப் பற்றி யோசிக்க வேண்டும். அதை விட்டு வேறு எதெல்லாமோ பற்றி நினைத்தால் கையிலுள்ள சாமான் மறந்து தொலைக்க வேண்டியதுதான். ஆகவே மறதி என்பதற்கு அர்த்தம், 'ஒன்றைப் பற்றி நினைக்க வேண்டிய சமயத்தில் வேறு ஒன்றைப் பற்றி நினைத்தல்' என்பது தான் பொருள்!" என்று சளசள வென்று பேசி நிறுத்தினான். அடை மழை ஓய்ந்தாற் போலிருந்தது.

ஆனாலும் அவன் சொல்லுவதிலும் ஓரளவு உண்மை இருப்பது போலத்தான் பட்டது. "தேவலையே சாம்பு! உனக்குக் கூட ஞாபகப் பிசகா வைத்துவிட்டான் போலிருக்கிறதே!" என்றேன்.

"என்ன?" என்றான் சாம்பு.

"புத்தி!" என்றேன் நான்.

★

அதற்குள் மின்சார வண்டி வந்தது. நாங்கள் இருவரும் முண்டியடித்துக்கொண்டு ஏறினோம். கிண்டியிலிருந்து புறப்பட்டு வரும் வண்டியாகையால் கூட்டம் அதிகமிருக்கவில்லை. இரண்டுபேரும் சேர்ந்தாற் போல் உட்காரக்கூடிய இடமிருந்தது. சாம்பு, பேச்சைத் தொடர்ந்தான்.

"எனக்குப் புத்தியிருப்பதாக நீ ஒத்துக் கொண்டாலும் சரி, ஒத்துக் கொள்ளா விட்டாலும் சரி. அதைப் பற்றி எனக்கு அக்கறை இல்லை. ஆனால் சில விஷயங்களில் என் புத்தி ரொம்பத் தீக்ஷண்யமாகத்தான் இருக்கிறது!" என்றான் சாம்பு.

"பலே, பலே!" என்றேன் சிரித்துக் கொண்டே.

"இதில் சிரிப்பதற்கோ, கேலி செய்வதற்கோ ஒன்றுமில்லை. தற்பெருமையாகவும் சொல்லிக் கொள்ளவில்லை. உள்ள விஷயத்தைத்தான் சொல்லுகிறேன். இதோ இந்தத் தோல் பையிருக்கிறது. இதை எத்தனை வருஷங்களாக வைத்துக் கொண்டிருக்கிறேன் தெரியுமா? எத்தனை இடங்களுக்கு எடுத்துச் சென்றிருப்பேன் தெரியுமா? ஆனால் ஒரு இடத்தில் ஒரு தடவை மறந்துவிட்டேன் என்பது உண்டா? கிடையாது. நான் மறந்தாலும், என் கை மறக்காது என்கிறேன். கையில் பிடிப்பில்லாமல் இந்த வலது கை வெளியே கிளம்பாது. அது மட்டுமல்ல. எனக்கு எத்தனை பேருடைய டெலிபோன் நெம்பர்கள் ஞாபகம் இருக்கிறது, தெரியுமா? எப்போதோ யார் யாரோ சொன்ன நெம்பர்கள் எல்லாம் நினைவில் இருக்கின்றன. உலகில் எத்தனைவிதக் கார்கள் உண்டோ—போர்டு, கிரைஸ்லர், மாரிஸ், ஆஸ்டின், செவ்ரோலெட்—அத்தனை பெயர்களும் இன்ன இன்ன வருஷத்து 'மாடல்' என்பதும் பார்த்த மாத்திரத்தில் சொல்லி விடுவேன். இவ்வளவுக்கும் நான் காரில் போகிறவனா என்ன? பஸ்ஸில்கூடப் போவதில்லை. ஆமாம், கனம் கோபால் செட்டிகாரு அந்தப் புண்ணியத்தைக் கட்டிக் கொண்டார். பஸ் கட்டணங்கள் எக்கச் சக்கமாக ஏற்றிக் கன்னாபின்னா வென்று 'ஸ்டேஜ்'கள் ஏற்படுத்தியதிலிருந்து பெரும்பாலும் நடந்தே போய்விடுகிறேன். சினிமா சம்பந்தமான செய்திகள், ஹைகோர்ட்டில் நடக்கும் வழக்குகள் ஆகிய உதவாக்கரை விஷயங்கள் அத்தனையும் என் மண்டைக்குள் ஏறி என் மூளையை எப்படிப் பற்றிக் கொண்டிருக்கின்றன! உடும்புப் பிடிதான்!......" இப்படிச் சொல்லிக் கொண்டிருந்தபோதே வண்டி எழும்பூர் ஸ்டேஷனுக்குள் நுழைந்தது. சாம்பு 'பளிச்' சென்று எழுந்து, "இப்படிப் பேசிக்கொண்டு போனால் இன்றெல்லாம் பேசலாம். நான் இறங்கவேண்டிய இடம் வந்துவிட்டது. வரட்டுமா?" என்று கூறிக் கொண்டே இறங்கினான்.

சாம்பு பத்தடி போயிருக்க மாட்டான். எனக்குத் திடீர் என்று ஏதோ நினைவு வரவே, "சாம்பு, சாம்பு!" என்று கூப்பிட்டேன். அந்தக் கும்பலிலும் இரைச்சலிலும் என் குரல் அவன் காதில் அவ்வளவு சுலபமாக விழுமா, என்ன? அதற்குள் என் வண்டியும் புறப்பட்டு விட்டது!

சனிக்கிழமை வந்தது. நான் ரயில்வேக் காரர்கள் சாமான்களை எடை போடும் இடத்திற்குப் போய்ச் சேர்ந்தேன். என்ன ஆச்சரியம்! எனக்கு முன்னால் சாம்பு அல்லவோ அங்கு வந்து காத்துக் கொண்டிருக்கிறான்.

"என்ன சாம்பு? இங்கே எங்கே





நடிகை :—என்ன டைரக்டர் ஸார்! எனக்கு நடுவிலேயெல்லாம் பாட்டு கொடுக்காமே படக் கடைசியிலே போய் ஒரே ஒரு பாட்டு கொடுத்திருக்கிறீங்களே?

டைரக்டர் :—ஜனங்களெல்லாம் சினிமாக் கொட்டகையைச் 'சட்'டுன்னு காலி பண்ண வேண்டுமல்லவா?

---

வந்தாய்?" என்று கேட்டேன். "அதை யேன் கேட்கிறாய் போ! அன்று உன்னிடம் என் அபார ஞாபக சக்தியைப் பற்றிப் பெருமையாகச் சொல்லிக் கொண்டேனு? அதற்குத் தண்டனையாக அன்றைக்கே அந்தத் தோல் பையைத் தவற விட்டுவிட்டேன். அதைத் தேடாத இடம் கிடையாது. ரயிலில் ஒரு வேளை தவற விட்டு, அது ஏலத்திற்கு வந்திருக்கிறதோ என்று பார்க்க வந்தேன்" என்றான்.

அடுத்த கணம் "சரி, உன் பையை நான் கொடுத்தால் எனக்கு என்ன கொடுக்கிறாய்?" என்று கேட்டேன்.

"என்ன! என் பையை நீ தருகிறாயா? அது உன்னிடமா இருக்கிறது? அப்பா! இப்போதுதான் எனக்கு உயிர் வந்தது!"

"அது சரி, எனக்கு என்ன தருகிறாய்?"

"நீ என்ன கேட்டாலும் தருகிறேன்."

"பை கிடைத்த சந்தோஷத்தில், கொடுக்கிற பரிசை, நான் நிர்ணயிக்கலாமா? நீயாகக் கொடுக்க வேண்டும். என்ன கொடுக்க உனக்கு இஷ்டம் அதைச் சொல்!" என்றேன்.

சாம்பு ஒரு விநாடி யோசித்தான். "வீட்டில் பிளாஸ்டிக் பிடி வைத்த குடை எங்கிருந்தோ வந்து சேர்ந்திருக்கிறது. யாருடையது, ஏன என்று புரியவில்லை. அதை உனக்குக் கொடுத்து விடுகிறேன்" என்றான்.

"குடையா? பிளாஸ்டிக் பிடியா? ஆரஞ்சு வர்ணப் பிடியா?" என்று ஆவலுடன் கேட்டேன்.

"ஆமாம்! ஆமாம்!"

"என் குடையல்லவா அது? நேற்றுகூட அந்தக் குடை காணவில்லையே என்று சொல்லிக் கொண்டிருந்தாள் என் மனைவி. என் கல்யாணத்தில் காசியாத்திரைக்கு வாங்கிக் கொடுத்த குடை! அதையே கொடு, அப்பா! புண்ணியமுண்டு! இல்லை என்றால் என் மனைவியின்..."

இப்படிச் சொல்லிக்கொண்டு வந்தபோதே சாம்பு. "ஓஹோ, அப்படியா?" என்றான்.

"ஏது?" என்றேன்.

"இல்லை என் பை உன்னிடமும், உன் குடை என்னிடமும் எப்படி வந்து சேர்ந்தது என்பதைப் பற்றி யோசித்துப் பார்த்தேன். அன்றைக்கு நாம் ரயிலில் பேசிக் கொண்டே இருவரும் பையையும் குடையும் பரிவர்த்தனை செய்து கொண்டு விட்டோம். என்றாலும் அன்றைக்கு 'நான் மறந்தாலும் என் கை மறக்காது' என்று கூறியது உண்மையாகி விட்டது, பார்த்தாயா? ஆனால் இந்தத் தடவை, சிறு தவறு நேர்ந்து விட்டது. பையைப் பிடிப்பதற்குப் பதிலாக உன் குடைப் பிடியைப் பற்றிக் கொண்டு விட்டது என் கை. அதை நானும் கவனிக்கவில்லை!" என்றான் சாம்பு.

"குப்புற விழுந்தாலும் மீசைக்கு மண் ஒட்டவில்லை" என்று சொன்னவனுடைய முகபாவம் எப்படியிருந்திருக்கும் என்பதை அப்போது சாம்புவின் முகத்தைப் பார்த்துத் தெரிந்து கொண்டேன். ஆனாலும் அதை வெளியிடலாமா? சாம்புவின் மனசு கஷ்டப்படும். அதனால் அதைக் கூறாமல், "உன் கை ஒரு சிறு தவறு செய்யவே, 'பையை எங்கே தொலைத்து விட்டோம்' என்று அன்றிலிருந்து இன்று வரை வேதனைப் பட்டிருக்கிறாய். ஆனால் நானோ வீட்டிலிருந்து புறப்பட்ட போது குடையுடன் புறப்பட்டதையே மறந்து போனேன். அதனால் ஒரு பிரயோஜனம் ஏற்பட்டது. 'குடை தொலைத்து விட்டோமே!' என்று வேதனையே படவில்லை. குடை தொலைத்து விட்ட விஷயம் தெரிந்த கையோடேயே கிடைத்து விடும் என்ற விஷயமும் தெரிந்து விட்டால் சந்தோஷம் மட்டும்தான் எனக்கு இருக்கிறது! பார்த்தாயா, மறதியினால் எனக்கு ஏற்பட்ட லாபத்தை! ஆகவே வாழ்க மறதி!" என்று கூறிக் கொண்டே லைம் அடைக்கும் இடத்தை விட்டு வெளியேறினோம்.

# படித்துப் பாருங்கள்!

## வேதாரண்யம்

தமிழ் நாட்டில் எத்தனையோ புகழ் பெற்ற க்ஷேத்திரங்கள் இருக்கின்றன. ஆனால் வேதாரண்யத்தைப் போன்ற பாக்கியம் செய்த க்ஷேத்திரம் எது?

பாரத தேசத்தின் சுதந்திரப் போராட்டத்துடனும் மகாத்மா காந்தியின் பெயருடனும் ராஜாஜியின் வாழ்க்கையுடனும் கலந்து விட்ட பாக்கியம் வேதாரண்யத்தைத் தவிர வேறு எதற்குக் கிடைத்தது?

1930-ம் வருஷம் ஏப்ரல் 13ம் தேதி, வருஷப் பிறப்பன்று தமிழ்நாட்டு அருமைத் தலைவர் ராஜாஜியின் தலைமையில் திருச்சியிலிருந்து, பிரிட்டிஷ் ராஜாங்கத்தின் சட்டத்தை மீறி வேதாரண்யத்தில் உப்பு எடுக்க 98 பேர் கொண்ட சத்யாக்கிரஹிகள் படை சென்றது. சத்தியத்தையும், அஹிம்சையையும் ராமநாமத்தையும் ஆயுதங்களாகக் கொண்டு சென்றது அப்படை. அதற்குத்தான் தஞ்சை ஜில்லா கலெக்டர் ஸ்ரீமான் தார்னே எத்தனை வித இடையூறுகள் விளைவித்தார்! சத்யாக்கிரஹிகளுக்கு உண்ண உணவும் குடிக்க நீரும் அளித்தால் ராஜத் துரோகமாகும் என்று தஞ்சை வாசிகளைப் பயமுறுத்தினர். எனினும் ராஜாஜியின் சாந்தமும் சத்தியமும் தஞ்சை ஜில்லா வாசிகளை ஆட்கொண்டது. அரசாங்கத்துச் சட்டத்தை மீறி வேதாரண்ய சத்யாக்கிரஹிகளுக்கு ராஜோபசாரம் செய்தார்கள்.

இவற்றையெல்லாம்பற்றி இந்நூலில் வெகு விரிவாக எழுதப் பட்டிருக்கிறது. நெஞ்சை உருக்கும் பகுதிகளும், நெஞ்சை அள்ளும் பகுதிகளும் பல இருக்கின்றன. இதில் வேதாரண்ய உப்பு சத்யாக்கிரகம் சம்பந்தமாக ராஜாஜி எழுதிய ஆங்கிலக் கட்டுரையின் மொழி பெயர்ப்பும் இருக்கிறது.

ஆசிரியர்கள்: ராஜாஜி, ஜி. ராமசந்திரன், டி. ஆர். பத்மநாபன். பிரசுரம்: கஸ்தூரிபாய் காந்தி கன்யா குருகுலம், மகாராஜபுரம், வேதாரண்யம். விலை: ரூ 3.

## கவியின் கனவு

மகா வீரனை நெப்போலியன், 'நான் வாளின் கூர்மையைக் கண்டு பயப்படவில்லை; பேனாவின் கூர்மையைக் கண்டுதான் பயப்படுகிறேன்' என்று கூறினானாம். பேனாவின் சக்தி, எழுத்தின் சக்தி அபரிமிதமானதுதான். அதிலும் உண்மைக் கவிஞனின் எழுத்தின் வேகத்துக்கு அளவே இல்லை. இந்த உண்மையை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்ட நாடகம் கவியின் கனவு. தமிழ்நாட்டில் பல்லாயிரக்கணக்கான மக்கள் பார்த்தும் கேட்டும் களித்த மேற்கண்ட நாடகத்தைப் படித்து இன்புறுவதற்கும் வசதியாகப் புஸ்தக வடிவில் வெளி வந்திருக்கிறது. தமிழ் இலக்கியம் பல துறைகளில் முன்னேறியிருக்கிறது. எனினும் நாடகத் துறையில் முன்னேறவில்லை என்ற குறை வெகு நாட்களாகவே இருந்து வந்தது. அந்தக் குறையை ஸ்ரீ எஸ். டி. சுந்தரம் இந்நாடகத்தின் மூலம் நிவர்த்தி செய்திருக்கிறார்.

ஆசிரியர்: எஸ். டி. சுந்தரம், கிடைக்குமிடம்: பாரி நிலையம், 59, பிராட்வே, சென்னை 1. விலை: ரூ. 2—8—0.

## இருது சங்கார காவ்யம்

மகா கவி காளிதாஸன் வடமொழியில் செய்த 'ருது ஸம்ஹாரம்' என்ற காவியத்தைத் தமிழில் செய்யுள்களாக மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. இதில் ஒவ்வொரு பக்கத்திலும் பெரும் பகுதி தமிழ்ச் செய்யுள்களைப் புரிந்துகொள்வதற்கான பதவுரைகள் குறிப்புரைகள் அளிக்கப் பட்டிருக்கின்றன.



"மாடு இன்னும் பருத்திக்கொட்டை, ஆடு இன்னும் தழை, கொடிகள், குதிரை சாப்பிடும் கொள்ளு இதெல்லாம் மனிதர்கள் போட்டிக்கு வந்து விட்டார்கள்! நாம் சாப்பிடும் காகிதத்துக்கு மட்டும் இன்னும் போட்டிக்கு வரவில்லை!"



"அதை ஏன் கேட்கிறேன்? மாட்டுப் பெண் பிறந்தகத்துக்குப் போகணும் என்று 'ஒத்தைக் காலிலே' நிற்கிறாள்!"

---

இவற்றைக் கொண்டுதான் இன்று எழுதப்பட்ட தமிழ்ச் செய்யுள்களைப் புரிந்துகொள்ள முடியும் என்றால், இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன் காளிதாஸனால் ஸமஸ்கிருதத்தில் எழுதப்பட்ட காவியம் பயில்வது அப்படியொன்றும் கஷ்டமாக இராது என்ற தைரியம் உண்டாகிறது.

ஆசிரியர்: முகாச்ரமம் தி. சதாசிவ ஐயர், சுன்னாகம், இலங்கை. விலை: ரூ 1-8-0.

## Professor R. Srinivasan Shastiabdapurthi Souvenir

ஆசிரியத் தொழிலில் புகுந்தவர்களில் பெரும்பாலோர் பள்ளிக்கூடம்தான் உலகம் என்று நினைத்து, மாணவர்களுக்குக் கற்றுக் கொடுப்பதுடனேயே நின்று விடுவதுண்டு. புரொபஸர் ஆர். ஸ்ரீனிவாசன் இதற்கு விதிவிலக்கானவர். திருவனந்தபுரம் யூனிவர்ஸிட்டிக் கல்லூரியில் பல வருஷ காலம் தொண்டாற்றிவிட்டு, அந்நகரத்தை விட்டுப் புறப்பட்டபோது, அந்நகர மக்கள் ஒவ்வொருவரும் தங்கள் உறவினர் ஒருவரை விட்டுப் பிரிவது போன்ற உணர்ச்சியை அடைந்தனர். ஸ்ரீ ஸ்ரீனிவாசன் பொது வாழ்க்கையில் கலந்துகொண்டு மக்களுடைய அன்புக்கு அவ்வளவு பாத்திரமாகி விட்டார். சமீபத்தில் இந்த அறிஞரின் அறுபதாவது ஆண்டு விழா மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. மேற்படி விழாவையொட்டி, திருவனந்தபுரத்துப் பிரமுகர்கள் பலர் அடங்கிய ஒரு கமிட்டி ஒரு ஞாபகார்த்த மலரை வெளியிட்டுள்ளது. இம்மலரில் திவான்பகதூர் ஸ்ரீ கே. எஸ். ராமஸ்வாமி சாஸ்திரி, எப். ஜி. நடேசய்யர் போன்ற நண்பர்களும் பெரியார்களும் ஸ்ரீ ஸ்ரீனிவாசனுடைய குணவிசேஷங்களைப் பாராட்டி எழுதியுள்ளார்கள். ஸர் ஸி. பி., முதலிய பிரமுகர்களின் வாழ்த்துச் செய்திகளும் அடங்கியிருக்கின்றன.

ஸ்ரீ ஸ்ரீனிவாசனுடைய சங்கீத ரசிகத் தன்மையும், கர்நாடக சங்கீதத்துக்கு அவர் செய்துள்ள தொண்டும் யாவரும் அறிந்ததே. சொந்தமாக அவர் சில சிறந்த சாஹித்தியங்களும் இயற்றியுள்ளார். காலட்சேபத்துறையிலும் அவர் சிறந்த விற்பன்னர் என்பதை இம்மலரில் வெளியாகியிருக்கும் சில படங்கள் மூலமும் மற்ற விவரங்கள் மூலமும் அறிந்து மகிழ்கிறோம்.

## எச்சரிக்கை

இதைப் போன்ற நாற்பத்து நாலு தலைப்புகளில் எழுதப்பட்ட பல பாடல்களின் தொகுதி இது.

ஆசிரியர்: வெள்ளியங்காட்டான். கிடைக்குமிடம்: சந்தே கவுண்டன்பாளையம் ஆலாந்துறை, கோவை. விலை: ரூ 1-0-0.

## வாழ்க்கையும் மனோதத்துவமும்

சுவரை வைத்துத்தான் சித்திரம். அதைப் போல் மனத்தை வைத்துத்தான் மனிதனும், அவனுடைய வாழ்க்கையும். ஆகவே மனிதனின் மன இயல்புகளை மேல் நாட்டினர் ஒரு சாஸ்திரமாகப் பயின்று ஆராய்ச்சி செய்திருக்கின்றனர். அவ்வாராய்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டது இச்சிறு நூல்.

ஆசிரியர்: முல்லை முத்தையா.

## காந்திப் பெரியார்

## விஜயலட்சுமி பண்டிதையார்

இந்த இரண்டு புஸ்தகங்களும் பள்ளிச் சிறுவர்களுக்குப் பயன்படும் வகையில் எளிய தமிழில் எழுதிப் பெரிய எழுத்துக்களில் அச்சடிக்கப்பட்டிருக்கிறது.

ஆசிரியை: பண்டிதை திரு என். திருவேணிவேணியம்மாள். மேற்கண்ட மூன்று புஸ்தகங்களையும் பிரசுரித்தவர்கள்: ஆசிரியர் நூற்பதிப்புக் கழகத்தார், பவழக்காரத்தெரு, சென்னை 1. விலை: ஒவ்வொன்றும் 0-8-0.

# ஆயிரம் பொன்

**வி. எஸ். ஆர்.**

"உனக்கு அரிசி வேணுமா?" பெருமாள் மாட்டுக்காரனின் மேளம் 'டங் டங்' என்று சப்தித்தது. பெருமாள் மாடு 'வேண்டாம்' என்பதற்கு அடையாளமாகத் தலையை ஆட்டியது.

"பருத்திக்கொட்டை வேணுமா?"

உஹூம்!

"புண்ணாக்கு வேணுமா?"

உஹூம்!

"ஐயா வீட்டுச் சொக்காய் வேணுமா?"

"ஆமாம்" என்று தலையையாட்டியது பெருமாள் மாடு.

"ஐயாவுக்குக் கும்பிடு போட்டு வா!" மாடு முன்னே சென்று வீட்டுக்காரர் அருகில் நின்றது. சுற்றிலுமுள்ள சிறுவர்கள் கை தட்டி ஆரவாரித்தனர். வீட்டுக்காரர் கொண்டு வந்து போட்ட அரிசியைத் தோளிலிருந்த பையில் வாங்கிக் கொண்டு புறப்பட்டான் சிங்கண்ணன். சோழிகள் வைத்துத் தைத்த பட்டுத்துணி அவன் மாட்டின் உடம்பைப் பல இடங்களிலும் அலங்கரித்துக் கொண்டிருந்தது. பல வர்ணங்களில் கிழிசல் துணிகள் மாட்டின் முதுகில் போடப்பட்டிருந்தன. அவன் தோளிலிருந்த பையில் அரிசி நிறைந்திருந்தது. அவன் மனதில் மகிழ்ச்சி நிறைந்திருந்தது. "ஹை! ஹை!" என்று மாட்டை அதட்டவே, மாடும் துள்ளிக் குதித்து ஓடியது. அன்று சிங்கண்ணன் வேலை முடிந்து குடிசைக்குத் திரும்பிக் கொண்டிருந்தான். அவனை அறியாமலே அவன் உதடுகள் ஒரு பாட்டை முணுமுணுத்தன.

ஆனால் இதெல்லாம் பழைய கதை—பத்து வருஷங்களுக்கு முன் நடந்த சம்பவம். தினமும் அவனுக்குப் பை நிறைய அரிசியும் மாட்டின் முதுகு நிறையத் துணியும் கிடைத்தது அப்பொழுது. இப்பொழுதோ, சிங்கண்ணனுக்கு அறுபதுக்கு மேல் வயதாகி விட்டது. முதுமையினால் உடல்குன்றிக் கண்கள் பஞ்சடைந்து, எழுந்து நடமாடவும் முடியவில்லை. அவனே முதுமையடைந்து விட்டபோது, மாடு மட்டும் இளமையாக இருக்க முடியுமா? பழைய சுறுசுறுப்பும் தைரியமும் மாட்டுக்கு இல்லை. மாடு தொத்தலாக இருந்த போதிலும், அதை அலங்கரித்து வெளியில் அழைத்துக் கொண்டு போனால் தானே ஏதாவது கிடைக்கும்?

சிங்கண்ணன் மூக்கி முனகிக் கொண்டு மாட்டை அலங்கரிப்பான். பட்டுத் துணியில் வைத்துத் தைக்கப் பட்டிருந்த சோழிகள் எல்லாம் உதிர்ந்து போயிருந்தன. அதை மறுபடியும் வைத்துத் தைப்பதற்குக் கூட அவனுக்கு முடியவில்லை. ஊசியில் நூல் கோப்பதற்குக் கூட அவனால் முடியாது. எப்படியோ மாட்டை அலங்கரித்து விட்டு, "ராசப்பா! எவ்வளவு ஜோராக இருக்கிறாய் தெரியுமா?" என்று தடவிக் கொடுப்பான். ராசப்பவிடம் எப்பொழுதுமே கிழவனுக்கு உயிர்.

குடிசையை விட்டுக் கொஞ்ச தூரம் போனதுமே மாடு நகர மறுத்துவிடும். 'ஹை! ஹை!' என்று மாட்டை அதட்டுவான். மாடு தள்ளாடி நடந்து செல்லும். சிங்கண்ணன் கேட்கும் கேள்விகளுக்குப் பதில் சொல்லும் அதிசயத்துக்கு மேல் அந்த மாடு இன்னொரு அதிசயத்தையும் சாதித்துக் கொண்டிருந்தது. நாள் கணக்கில் வைக்கோல், புல், இல்லாமல் தண்ணீர் இல்லாமல் எப்படி உயிர் வாழ்கிறது என்பதுதான் அந்த அதிசயம். சில காலமாக அந்த ஊரில் கொடிய தண்ணீர்ப் பஞ்சமும் ஏற்பட்டிருந்தது.

வழக்கம்போல் வீட்டு வாசலில் நின்று "உனக்கு அரிசி வேணுமா?" என்றான் சிங்கண்ணன். அவன் முதிய குரல் நடுங்கியது. மாடு வழக்கம்போல், 'வேண்டாம்' என்று தலையை ஆட்டாமல், நின்று கொண்டிருந்தது. முதுமையினால் அதன் புத்தியும் மந்தித்துப்போய் வழக்கம் போல் சரியாகத் தலையை ஆட்டுவதில்லை.

"ஓஹோ! மாட்டுக்கும் அரிசி வேணுமோ? அப்பா, சிங்கண்ணு! மழையில்லாமல் ஊர் தவிக்கிறது. ரேஷன் ஆபீஸிலே போய் உன் மாட்டுக்கு ரேஷன் வாங்கிக் கொள்!" என்று வீட்டுக்காரர் கேலி செய்தார்.

"உனக்குப் பருத்திக் கொட்டை வேணுமா?" 'டர் டர் டர்' என்று மேளம் சப்தித்தது. அந்த மேளம் ஒரு பக்கத்தில் கிழிந்து போய் விட்டதால் பழைய நாதம் உண்டாகவில்லை.

'வேண்டாம்' என்பதற்கு அடையாளமாக மாடு தலையை ஆட்டியது.

"உன் மாட்டுக்குக் கேவலம் பருத்திக் கொட்டை பிடிக்குமா? அரிசிதான் பிடிக்கும்" என்று வாசலில் நின்ற கூட்டத்திலிருந்த ஒருவன் கூறிச் சிரித்தான். சுற்றிலுமுள்ளவர்கள் கேலி செய்தனர்.



"ஐயா அரிசி போடுங்க!" என்று கெஞ்சினான் சிங்கண்ணன்.

"போடா வேலை மெனக்கட்டவனே!" என்று வீட்டுக்காரர் அதட்டினார் உள்ளேயிருந்து.

"கொஞ்சம் பழைய சோறாவது போடுங்க, ஐயா!"

"சாதம் வேணுமா, சாதம்? இந்த வருஷமும் மழை பெய்யாமலிருக்கட்டும். ரேஷனில் இரண்டு அவுன்ஸ் குறையட்டும். கட்டாயமாகப் போடுகிறேன், போய் வா!"

அவர்கள்தான் என்ன செய்வார்கள்? இரண்டு வருஷமாக மழை இன்றி ஊரில் பஞ்சம் வந்துவிட்டதால் குடி தண்ணீருக்குக் கூட வழி இல்லாமல் ஜனங்கள் தவிக்கிறார்கள். ஏழைப் பெருமாள் மாட்டுக்காரனுக்கு யார்தான் பிச்சை போடுவார்கள்?

ஏமாற்றத்துடன் மேலே நடந்தான் சிங்கண்ணன். அவன் கூட ரேஷன் ஆபீசுக்குப் போய் ரேஷன் கார்டு வாங்கி வைத்துக் கொண்டுதான் இருந்தான். ஆனால் அதை வாங்குவதற்குத்தான் அவனிடம் பணம் இல்லை. அவனைப் பார்த்து மனமிரங்கியவர்கள் கொண்டு வந்து போடும் பிடி யரிசியை ஒன்று சேர்த்துக் கொண்டு வந்து பொங்கித் தின்று காலம் தள்ளி வந்தான். இவ்வருஷமும் மழை மோசம் செய்து, எட்டு அவுன்ஸ் அரிசி, ஆறு அவுன்சாகிவிட்டபிறகு, 'போடுகிற மகாராஜாக்கள்' கூட 'இல்லை' யென்று கையை விரித்து விட்டார்கள்.

*

அடுத்த வீட்டின் எதிரிலும் அவன் 'கச்சேரி' ஆரம்பமாயிற்று.

"ஐயா வீட்டு வேட்டித் துணி வேணுமா?" என்றான் சிங்கண்ணன்.

"ஆமாம்!" என்றது மாடு.

"போய்ச் சேரு, கொடுப்பாங்க!"

மாடு முன்னே சென்று வீட்டுக்காரரின் பெண்ணின் கையை நக்கிக் கொடுத்தது.

"அம்மா! என் கிழிசல் தாவணியை எடுத்து வைத்திருக்கயே. அதை மாட்டுக்காரனுக்கு கொடு!" என்று குழந்தை கூறியது.

"அழகாயிருக்கு! அதைப் பாத்திரக்காரனிடம் போடுவதற்காக வைத்திருக்கிறேன். உனக்குப் பள்ளிக்கூடத்துக்கு டிபன் கொண்டுபோக 'டிபன் செட்' வாங்க வேண்டுமென்றாயே" என்றாள் அம்மா.

வீட்டுக்கார அம்மாள் கோபத்துடன் வாசலுக்கு வந்து, "துணியுமில்லை, ஒன்றுமில்லை. இனிமேல் வராதே!" என்று கத்தினாள்.

சிங்கண்ணன் வேதனையுடன் பெருமூச்செறிந்தான்.

"பாத்திரம் வாங்கலியா, பாத்திரம்! பழைய துணிகள், சரிகைகளுக்குப் பாத்திரம்!" என்று கூவிக்கொண்டு வந்தான் பாத்திரக்காரன்.

"பாத்திரக்காரா!" என்று கூப்பிட்டாள் வீட்டுக்காரி.

தனக்குப் போட்டியாக வந்த பாத்திரக்காரனைப் பார்த்துச் சிங்கண்ணனுக்கு ஆத்திரம் வந்தது. இந்தப் பாத்திரக்காரர்கள் ஊரில் முளைத்தது சமீபகாலத்தில்தான். முளைத்தாலும் முளைத்தார்கள் சிங்கண்ணன் சுபீட்சத்துக்கு முற்றுப் புள்ளி வைத்து விட்டார்கள்.

தனக்கு வந்த கோபத்தில் மாட்டின் முதுகில் சுளீரென்று ஒரு அடி வைத்தான் சிங்கண்ணன். ஆனால், அதற்குச் சக்தியிருந்தாலல்லவா, ஓட்டம் எடுப்பதற்கு? மறுகணம், ஏன் அடித்தோம் என்று தோன்றிவிட்டது அவனுக்கு. கண்களில் நீர் கசிய மாட்டின் முதுகைத் தடவிக் கொடுத்தான்.

*

அன்று சிங்கண்ணனுக்குப் பெரும் சோதனை தினம். நடுப்பகல் ஆகியும் ஒரு வீட்டிலும் அவனுக்கு எதுவும் கிடைக்கவில்லை. ஒன்றும் கிடைக்காத கோபமும், பசிக் களைப்பும், அவனை வாட்டத் துக்கம் தொண்டையை அடைக்கக் குடிசையை நோக்கித் திரும்பினான். பசி பொறுக்க முடியாமல் மாடு அலறியதா? அல்லது அவன் நிலைமைக்காக வருந்திக் கதறியதா? குடிசைக்கு வந்ததும் மாட்டின் அலங்காரத்தைக் கலைத்து வாசலில் துரத்திவிட்டான். கீழே பாயை விரித்துப் படுத்தான்.

தன் நிலைமையை நினைத்துப் பார்த்ததும் அவனுக்குச் சிரிப்பு வந்தது. முன்பு அவன் இருந்த நிலை என்ன? இப்பொழுது படும் கஷ்டம் என்ன? தனக்கும் வயதாகி, மாடும் கிழடு தட்டி, ரோகமும் வந்து, பாத்திரக்காரனும் வந்து விட்டான். அந்த ஊரில் குடிப்பதற்குக் கூடத் தண்ணீர் இல்லை. எதிர் காலத்தை எண்ணியதும் அவன் நெஞ்சு துணுக்குற்றது. இதே மாதிரி நிலையில் எத்தனை நாள்தான் அவன் காலம் தள்ள முடியும்?

கடைசிக் காலத்தில் சோறு போட்டு அவனைக் காப்பாற்றக் கூடியவர்கள் யார் இருக்கிறார்கள்? அவனது நெருங்கிய உறவினன் என்று சொல்லக் கூடியவன் சிதம்பரத்திலிருந்த அவன் தங்கச்சியின் மகன் பராங்குசம். சில வருஷங்களுக்கு முன் பராங்குசம் அந்த ஊருக்கு வந்தபோது, தன்னுடன் வரும்படி மாமனையும் அழைத்தான். அப்பொழுது 'பிஸினெஸ்' இவ்வளவு மோசமாக இல்லாததாலும், பிறந்த ஊரை விட்டுக் கிளம்ப இஷ்டமில்லாததாலும், கிழவன் அவன் யோசனையை ஏற்றுக் கொள்ளவில்லை. இப்பொழுது, சிதம்பரத்துக்குக் கிளம்பிப் போய் விடலாமா? ஆனால் மாட்டை, அவன் அன்பான ராசப்பனை என்ன செய்வது?

அப்பொழுது ராசப்பன் 'அம்மா' என்று கத்தியது. அந்தக் கதறல் அவன் அடிவயிற்றைக் கலக்கியது. 'ஒரு நாளும் இல்லை. ராசப்பனை விட்டுப் போகவே கூடாது. அப்படிப் பட்டினியால் உயிர் போனால் போகட்டும்' என்று தீர்மானித்தான். 'நான் என்ன முட்டாள்! இருவரும் போக வேண்டுமானால் கையில் பத்து ரூபாய் வேண்டாமா? என்னென்னவோ மனக் கோட்டை கட்டினேனே!' என்று நினைத்துச் சிரித்துக் கொண்டான்.

மறுபடியும் ராசப்பன் கத்தும் சத்தம் கேட்டது. முனகிக் கொண்டு மெதுவாக எழுந்து வெளியே வந்தான். சற்றுத் தூரத்தில் இரண்டு பேர்கள் மாட்டைப் பிடித்து ஏதோ பார்த்துக் கொண்டிருந்தார்கள். என்ன நடக்கிறது என்பதை அறிய சற்று முன்னே சென்றான் கிழவன்.

"யாரது?" என்று கேட்டான் சிங்கண்ணன். அப்பொழுதுதான் எதிரில் நின்றது தோல் வியாபாரி சோணமுத்து என்பது தெரிந்தது. 'திக்'கென்றது அவனுக்கு.

"சிங்கண்ண நாய்க்கரே! மாட்டுக்கோ வயதாய்ப் போச்சு. எலும்பும் தோலுமா நிற்கிறது. ஏன் அதைக் கட்டிக் கொண்டு அழறீங்க? அதை இப்பொழுது வந்த விலைக்கு விற்றுவிட்டால் உங்கள் கையிலும் கொஞ்சம் பணம் இருக்குமல்லவா?"

"இந்த வார்த்தை சிங்கண்ணன் எதிர்பார்த்ததுதான். அவனுக்கு வந்த ஆத்திரத்தில் உடம்பில் தைரியமிருந்தால் சோணமுத்துவை ஒரே அறையாக அறைந்திருப்பான். தன் கோபத்தை அடக்கிக் கொண்டு, 'சோணமுத்து! உங்க வேலையைப் பாருங்க!" என்று சொல்லிவிட்டுத் திரும்பினான் சிங்கண்ணன்.

பணம் கிடைத்தால் 'சிதம்பரத்துக்குப் போய்விடலாம் என்ற எண்ணம் அவன் மனதில் மின்னலைப் போல் பளிச்சிட்டது.

*

## முதல் காரியம்!

உபாத்தியாயர் :- மணி, சந்திரகுப்த மஹாராஜா சிம்மாசனம் ஏறினதும் முதல் காரியமாக என்ன செய்தார்? சொல், பார்க்கலாம்!

மணி :— சிம்மாசனத்தில் உட்கார்ந்தார், ஸார்!

★



## ச - மத்து!



“அம்மா அடுத்த ஆத்திலே போய் மத்து வாங்கிண்டு வந்துட்டேன்!”
“அடி, சமத்து!”

---

எனினும் உயிரினும் நேசித்த ராசப்பனை இந்த முடிவுக்கு உள்ளாக்க அவன் தயாராக இல்லை.

**ம**றுநாள் காலை குடிசையிலிருந்து எழுந்து வந்த சிங்கண்ணன் ராசப்பன் படுத்திருந்த நிலையைக் கண்டு திடுக்கிட்டான். அதை அசைத்துப் பார்த்தான்.

“ராசப்பா! போய்விட்டாயா?” என்று கேட்டுக் கண்ணீர் வடித்தான். ஸ்தம்பித்து நின்று கொண்டிருந்த அவன் தோளைப் பிடித்துக் குலுக்கினான், அங்கே வந்த மருதையன். “கிழவா! இடிஞ்சு நின்னு விட்டியே! வயசான மாடுதானே? ஆக வேண்டியதைக் கவனிப்போம், வா!” என்றான் அவன்.

“என் கையினாலேயே புதைத்து விடுகிறேன். மண்வெட்டி இரண்டை எடுத்து வா!” என்று கூறினான் சிங்கண்ணன்.

“அதோ ரயில் ரோட்டில் ஒரு ஆழமாகக் குழி தோண்டிப் புதைத்து விடுவோம். சோணமுத்து மாட்டுக்கு ஏதோ விஷச் செடியைக் கொடுத்துக் கொன்று விட்டானோ என்று நினைக்கிறேன். குழி ரொம்ப ஆழமாக இருக்க வேண்டும். அந்தப் பயல் தோண்டி மாட்டை வெளியே எடுக்க முயற்சித்தாலும் முயற்சிப்பான்” என்று கூறி விட்டு மண் வெட்டியுடன் நடந்தான்.

சிங்கண்ணன் புது பலம் பெற்று விட்டவனைப்போல் தோன்றினான். அவன் நடையைக் கண்டு மருதையனுக்கே ஆச்சரியம் வந்து விட்டது. ரயில் ரோட்டை அடைந்ததும், கிழவன் ‘கிடு கிடு’ வென்று வேகமாகப் பூமியை வெட்ட ஆரம்பித்தான். களைப்போ சோர்வோ இன்றி மேலும் மேலும் ஆவேசம் வந்தவனைப் போல் தோண்டிக் கொண்டேயிருந்தான்.

சிங்கண்ணனும், மருதையனும் இரண்டு அடி, மூன்று அடி, நாலு அடி தோண்டி விட்டனர். சாயங்காலமும் வந்து விட்டது. “அண்ணே! போதுமே பள்ளம்!” என்றான் மருதையன்.

“கொஞ்சம் இரு!”

சிறிது நேரம் ஆனதும் பூமியிலிருந்து குபீரென்று ஜலம் இருவர் முகத்திலும் அடிக்கவே அவர்கள் திடுக்கிட்டு நின்று விட்டனர்.

“தண்ணி அண்ணே!” என்று கூவினான் மருதையன்.

“ஆமாம். இந்த இடம் ராசப்பனுக்கு உபயோகப் படாது. ஆனால் ஊருக்கு உபயோகப்படும். தண்ணீர் இல்லாத ஊருக்கு இந்தக் கிணறு கிடைத்தது. இனிமேல் இந்த ஊரார் கஷ்டம் விட்டது. ராசப்பன் இருந்தும் ஆயிரம் பொன், செத்தும் ஆயிரம் பொன்!...” என்று கூறும்போது கண்களில் நீர் பெருகியது.

“அண்ணே! ஓடிப்போய்ப் பட்டாமணியக்காரரை அழைத்து வருகிறேன். இன்னொரு குழி தோண்டி ராசப்பனை...” என்று கூறிவிட்டு ஓடினான்.

சற்று நேரத்துக்கெல்லாம் ஊரே அந்த இடத்தில் திரண்டு கூடிவிட்டது. ‘குபு குபு’ வென்று பொங்கிய அந்த ஜலத்தைச் சாப்பிட்டுக் குதூகலித்தனர் ஊரார்.

“இந்த இடத்தில் குழாய் வைத்து ஊர் முழுதும் ஜலசப்ளை செய்து விடலாம்” என்றார் பஞ்சாயத்து போர்டு தலைவர்.

“இதற்கெல்லாம் காரணம் சிங்கண்ணன்தான். அவனுக்குப் பஞ்சாயத்து சார்பாக இருநூறு ரூபாய் கொடுக்கத் தீர்மானித்து விட்டேன்” என்றார் அவர்.

“கட்டாயம் கொடுக்கவேண்டும்” என்று ஏகோபித்துப் பல குரல்கள் எழுந்தன.

“எல்லாவற்றுக்கும் காரணம் ராசப்பாதான். அவன் இருந்தும் ஆயிரம் பொன், போயும் ஆயிரம் பொன்” என்று சிங்கண்ணனின் உதடுகள் முணு முணுத்தன.

# ஷேர் மார்க்கெட்

## பணம் சம்பாதிப்பதற்கான நவீனத் திட்டம்

○●○

இந்தியன் அயர்ன், ஸ்டீல் கார்ப்பொரேஷன் ஆப் பெங்கால் போன்ற பிரபல தொழில் ஸ்தாபனங்களது பங்குகளின் விலைகளில் ஏற்படும் தினசரி ஏற்றத் தாழ்வுகளினால், அவைகளை வாங்கி விற்பதன்மூலம் பணம் சம்பாதிப்பதற்கான சந்தர்ப்பம் மீண்டும் ஏற்பட்டுள்ளது. இத்தகைய திட்டத்தினால், பங்குகளின் முழு மதிப்பில் குறைந்தபக்ஷ டெபாஸிட்டாக 25 சத விகிதத்தை முன்பணமாக முதலீடு செய்வதே போதுமானது. இதனால் பங்குகளின் மீது செலுத்த வேண்டிய முழு தொகையையும் செலுத்தியது போன்றதாகவே கருதப்பட்டு, பங்குகளின் சொந்தக்காரராகவே எண்ணப் படுவர். உதாரணமாக ஒருவர் இந்தியன் அயர்ன் அண்டு ஸ்டீல் பங்குகளில் ரூ. 30 விதம் 100 பங்குகளை, குறைந்தபக்ஷ டெபாஸிட்டான 25 சதவிதம் செலுத்தி அவைகளை வாங்கி, விற்கும்வரை வைத்திருப்பதாக எண்ணிக்கொள்வோம். மார்க்கெட் நிலவரம் உயர்ந்து, இப் பங்குகளின் விலை பங்கு ஒன்று ரூ. 5/- விதம் அதிகமானால், வாங்கியவருக்கு அவரது 100 பங்குகளுக்கும் ரூ. 500/- லாபம் கிடைக்கும். இதில் அவர் எங்களுக்குச் சேரவேண்டிய கமிஷனும் வட்டியும் கொடுத்தால் போதுமானது. மார்க்கெட் நிலவரம் திருப்திகரமாக இல்லாது, கீழே போகுமென்ற அறிகுறி தோன்றும்போது, வாங்குவதைவிட கைவசமுள்ள பங்குகளை முதல்கையாக நல்ல விலையில் விற்று உங்களை லாபமடையச் செய்வதை உதாரணமாக எடுத்துக் காட்டலாம்.

மார்க்கெட் நிலவரங்களை நன்கு அறியவும் இதர அநேக கம்பெனிகளின் பங்குகளை வாங்குவதன் மூலமும் விற்பதன் மூலமும் பணம் சம்பாதிக்கும் நல்ல சந்தர்ப்பங்களையும் உங்களுக்கு அளிக்கிறோம்.

○●○

# பெங்கால் ஷேர் டீலர்ஸ்'

## ஸிண்டிகேட் லிமிடெட்

( ஸ்தாபிதம்: 1940 )

**இந்தியாவில் ஸ்டாக், ஷேர்களில் வர்த்தகம் செய்துவரும்**
**ஸ்தாபனங்களில் மிகப் பெரிய ஜாயிண்ட் ஸ்டாக் ஸ்தாபனம்**

**12, சௌரங்கி ஸ்கொயர் – கல்கத்தா - 1**

# ப்ரூக் லாக்ஸ்

## சாக்லெட் மலமிளக்கி




ப்ரூக்லாக்ஸ், மலச்சிக்கல் உண்டாகும் குடலினுள் மற்றுமே வேலை செய்து ஒரு தொந்தரவும் இன்றி மலச்சிக்கலை அடியோடு அகற்றுகிறது. ஆதலால் ஜீரண சக்தியை தடை செய்வதில்லை.

2, 8, 24 மாத்திரைகளடங்கிய வாட்டமான டைன்களில் கிடைக்கும். பெரிய டைன் வாங்குவது மிகவும் சிக்கனமானது.

**ஒரே இரவில் மலச் சிக்கலை அறவே அகற்றுகிறது.**

ஏஜண்டுகள்: தி ஓரியண்டல் மெர்க்கண்டைல் ஏஜன்ஸி, 99-அ, அரண்மனைக்கார வீதி, மதராஸ்-1

---

# சினிமா உலகில்

### உங்களுக்கு மூன்று அரிய சந்தர்ப்பங்கள்

1. நீங்கள் சினிமாவில் நடிக்கலாம்.
2. ஒவ்வொரு நடிகை, நடிகர்களைப்போல வருமானம் பெறலாம்.
3. ஒரு படம் தயாரிக்கும் உரிமையில் கிடைக்கும் வருமானத்தில் பங்கும் அடையலாம்.

நீங்கள் ஆணோ, பெண்ணோ, பட உலகில் அனுபவம் உண்டோ, இல்லையோ படித்தவரோ, அல்லாதவரோ யாராயினும், பயிற்சி கொடுக்கப்பட்டு, பட உற்பத்தியாளருடைய தீர்மானப்படி திறமைக்குத் தகுந்த பாகம் கொடுப்பதற்கு ஏற்றவாறு அளிக்க ஏற்பாடு செய்து உறுதிமொழி கூறுகிறோம்.

ஆனால், குறைந்த பட்சம் ரூ. 250/- பங்கு எடுப்பதுடன் தங்கள் பொறுப்பிலாவது காரரான கல்வியும், மனத் துணிவும், தொழிலில் ஆர்வமும் உள்ளவர்கள் மட்டும் கீழ்காணும் விலாசத்திற்கு தபால் பில்லையுடன் விண்ணப்பித்துக் கொள்ளவும்.

## கோவாபரேடிவ் ஸைன் புரொடக்ஷன்ஸ்

பிலிம் புரொடியூசர்ஸ் அண்டு டிஸ்ட்ரிப்யூடர்ஸ்

தபால் பெட்டி நெ. 47 :: கோயமுத்தூர்

குறிப்பு:— "முயற்சி" (தமிழ்) "[illegible]" (மலையாளம்) ஆகிய படங்கள் தயாரிக்கும் உரிமை எங்களுடையது


இருமல்களுக்கு
ஸிரோலின்
உட்கொள்ளுங்கள்!
SIROLIN
ஒரு 'ரோச்'
தயாரிப்பு

FAS-534

நவ நாகரீக
பெண்கள் விரும்புவது





டி.எஸ்.ஆர்.
கோகுல்
ஹேர் ஆயில்



டி.எஸ்.ஆர் & கோ.
கும்பகோணம்.

சென்னை நகரத்திற்கு சோல் ஏஜண்டு:
சுராஜ் ஏஜன்ஸிஸ்
10, ஜானிபாட்சா சாகிப் தெரு, சென்னை-14
கோவை, பாலக்காடு அண்டு நீலகிரிக்கு
சோல் ஏஜண்டுகள்:
B. பாலசுப்பிரமணிய செட்டியார்
846, வைசியாள் தெரு, கோயமுத்தூர்
வடஆற்காடு ஜில்லாவுக்கு:
சேகர்ஸ், திருப்பத்தூர் (வ. ஆ.)

ஜுவல் பதித்த கைக் கடிகாரங்கள்

FOR 2 WEEKS ONLY
AT LESS THAN HALF PRICES
EACH GTD.
10 YEARS
ALARM
TIME PIECE

605 ப்ளைன் ~~36/-~~ 12/-
605 ரேடியம் ~~33/-~~ 16/8



606 15 ஜுவல் க்ரோம் ~~76/-~~ 38/-
606 15 ,, ரோல்டுகோல்டு ~~86/-~~ 43/-



607 6 ஜுவல் க்ரோம் ~~60/-~~ 29/8
607 6 ,, ரோல்டுகோல்டு ~~70/-~~ 34/8



608 க்ரோம் கேஸ் ~~26/-~~ 13/-
608 டூயல் ரகம் ~~32/-~~ 15/-

○●○

தபால் செலவு தனி. இரண்டாக
ஆர்டர் செய்வோருக்கு இலவசம்

PIONEER WATCH Co
POST BOX NO 11428 CALCUTTA

REGD. NO. M. 4392